'இறந்தார்களா! அப்படியா? கொன்றதுதான் யார?'' என்று ஆத்திரத்தோடு கேட்கிறான் இந்திர ஜித்து.

‘ஆர்கொன றவா’
என றலும, ‘பேரதி
காயனென னும

பேர்கொன றவன
தமபிஇ லககுவன ;
பினபுநின றா

ஊாகொன றவ
னுலபபிற ரால’என
உறறதெல லாம

தாாகொன றையி
னுனகிரி சாயததவன
தானஉரைத தான (340)

5. ஆாகொனறவா எனறலும - அபபடியும கொலலக கூடியவா யாா? சொல எனறு ஆததிரததோடு இநதிர ஜிதது கேட்கவும் பேரதிகாயன எனும - மிகப பெரிய தேகதிடம் கொணடவன அதிகாயன, அநத அதிகாயன எனறு வழஙகிய போ கொனறவன - அபபடிப புகழ வாயநத பேரையே இலலாமல ஆககிவிட்டான அபபா, ராமனது தமபியாகிய இலககுவன பினபு நினறா - அவனது தம்பிமாா ஊர் கொனறவனுலப பிறரால என - இலஙகையை அழிதத அனுமானும் மறற வானரப படைகளாலும் உயிா விட்டனா எனறு உறறதெலலாம - நோநததை யெலலாம் தார் கொனறையினுன கிரி சாயததவன தானுரைத தான - கொனறை மாலை சூடிய சிவபெருமானது கைலையங் கிரியைச சாயததவன என்றெலலாம் கவி பாடிப் புகழ கொணட ராவணன சொனனுன.

6. அதிகாயன முதலியவாகள் உயிா துறந்தார்கள் எனறு கேட்ட மாததிரததில் இந்திரஜிததுக்குத துக்கம் பொங்கிககொணடு வந்தது.

இலக்குவனும் ஊரை எரிதத அனுமனுந்தான கொன்றாகள எனறு கேடட மாததிரததில மேலே சொனன துக்கம் போய, கோபமே வநதுவிட்டது, இந்திரஜிததுக்கு.

'இலக்குவனு கொனருன, அனுமனு கொன்ருன, அல்ல, நீதான் கொனருய.'

'கொனருா அவ
ரோ, கொலை சூழகென
நீ கொடுத தாய

வனதா னையா
மானுடா வனமை
அறிநதுமமன னு!

6. கொனருா அவரோ - இலக்குவனும், அனுமனுமா கொனருர்கள — அலல. கொலை சூழகென நீ கொடுத்தாய - கொலையுணடு சாவுஙகள என்றலலவா நீ அனுபபினுய் அவர்களை. வனதானையர் மானுடர் - வலிய சேனை பலம் உளள ராம லக்ஷமணருடைய. வனமை அறிந்தும் - வலிமையை நீ அறிநதும் தானே கொடுததாய. மனனு - ராவணனே!

என்ருனும
    எனைசசெல ஏவலே!
        ஏனஇதென ருே?'

நினருன நெடி(து)
    உனனி,மு னிநது
        நெருபபுயிரப பான. (341)

6 எனருனும் எனைச் செல ஏவலே - எநத நாளிலும் (ஒரு நாளுமே) எனனைப பகைவர் மேலப போர் செய்யச் சொலலி ஏவவிலலை. ஏன இது எனறு - ஏன இபபடிச செய்திருக்க வேணடும் எனறு நினருன நெடிதுனனி - விஷயம் தெரியவிலலையே எனறு நெடுநேரம் யோசிதத வனாய அபபடியே நினறு விட்டான முனிநது நெருபபுயிர்ப பான-மிகக கோபங கொணடு நெருபபுப போலக கொதிக் கும் பெருமூசசு விட்டவனை இநதிரஜிதது — நினருன் நெடிதுனனி

குறிபபு சாம்ராஜயத் திமிரில வளர்நதவன இநதிர ஜிதது துக்கம் கோபம், எலலாம பொஙகி எழுந்து வருகிறது. எலலாம் சேரநது விளக்குகிறது இநதிரஜித் தாகிய அரிய பாததிரததை.

# நான் தோற்றேன் இந்திரனுக்கு!

7. தம்பி அதிகாயனை, லக்ஷ்மணன் அம்பினால் மடிந்தான் என்று கேட்டமாத்திரத்தில் அவமானமும் கோபமும் இந்திரஜித்தின் மனசில் அபாரமாய் மூண்டுவிட்டன. மற்ற தம்பிகளும் இறந்து போனார்கள் என்று ராவணனே சொல்லக் கேட்டான். இதோடு தம்பி அட்சகுமாரனை அனுமன் ஆதியில தரையோடு தரையாய்த் தேய்க்கப்பட்டு இறந்த விஷயமும் ஞாபகத்துக்கு வந்தது.

எல்லாம் சேர்ந்து ஒரே கோபமாய்த் தந்தை ராவணன் மேலேயே பாய்ந்தது.

கோபத்தில் பேசுகிறான் இந்திரஜித்து:

'அட்ச குமாரனை நிலத்தோடு தேய்த்த அந்தப் பொல்லாத குரங்கை (அனுமனை) ஏதோ விக்கல வந்தபோது உட்கொள்வதற்கான அற்ப பதார்த்தம் என்று எண்ணி அலட்சியமாகப் பேசிப் பிறரை ஏவி விட்டாய். நீயே போய் அந்தக் குரங்கைக் கொன்றிருக்க வேண்டும். அது செய்யவில்லை நீ'.

அககப பெயய
ரோனைநி லத்தொ(டு)
அரைததுளா னை

விககற கொரு
தூஎன எண்ணி
விளமபிவிட் டாய!

புககத தலை
எயதநி னைநதிலை
புநதிஇல லாய!

மககளைத துணை
அறறனை, இறறதுன
வாழககைமன னே (342)

8 மேலும புலமபுகிறான் இராவணன புதல
வன இநதிரஜிதது

7. அக்கப பெயரோனை நிலத்தொடு அரைததுளானை — அட்சகுமாரனை தரையோடுதரையாயத் தேயதத அனுமனை. விக்கற் கொரு தூ என எண்ணி விளம்பி விட்டாய — விககலைத தடுபபதறகான ஒரு அறபப பதார்ததம். என்று எண்ணி அலட்சியமாயப பிறரை ஏவிவிட்டாய புக்கு அததலை எயத நினைநதிலை புந்தி யிலலாய — அநத இடத்துககு நீயே போய் நிறக எணணவிலலை புததியிலலாதவனுகிய நீ. மக்களைத துணை அற்றனை — புததிரரால வரும பலம் உனக்கு இலலை இற்றதுன வாழக்கை மனனே — உன வாழகை அடியோடு தொலைந்து போயவிட்டது மன் — ஒரேபடியாக.

'நடந்த காரியத்தை எண்ணி என்ன பிரயோஜனம்? சென்ற காரியத்தை நினைப்பதாலும், நினைத்துப் புலம்புவதாலும், மனசை ஏங்க விடுவதாலும் பிரயோசனம் இல்லை

'என்னின்று
நினைத்தும் இயம்பியும்
ஏங்கியுந் தான்?
கொலநின்ற
படைக்கலத் தெம்பியைக்
கொன்றுளானை
அந்நின்ற
களத்(து)அவன் ஆக்கையை
நீக்கியல் லால்
மன்நின்ற
நகர்க்கினி வாரலென்,
வாழ்வுமவேண் டேன்!' (343)

8 என் — என்ன பிரயோசனம் கொல நின்ற படைக் கலத்து எம்பியை — கொலைத் தொழிலை சதா தன்னிடத்தே கொண்டுள்ள வாள், வேல் முதலான படைக்கலங்களைக் கையாளும் தம்பி அதிகாயனைக் கொன்ற அந்த மனுஷன் லக்ஷ்மணனை. அந் நின்ற களத்து அவன் ஆக்கையை நீக்கி அல்லால் — அந்தப் போர்க்களத்திலேயே அவனது உடம்பை ஒழித்தால் அல்லது. மன் நின்ற நகர்க்கினி வாரலென் — கோட்டை பாதுகாப்புகளினால் உறுதியாக இருக்கிற இந்த இலங்கை நகருக்குள் இனி பிரவேசிக்க மாட்டேன் வாழ்வும் வேண்டேன் — இளவரசப் பதவி முதலான சம்பத்தை யும் விரும்ப மாட்டேன்.

9. மேலும் வீரா வேசம் பொங்குகிறது நதிரஜிததின உள்ளததில.

‘யாராலும மாயக்க முடியாத உறுதியான உயிர் கொண்ட தம்பியின உயிரை அலலவா வாங்கி விடடான அந்த மனுஷன

‘அந்த மனுஷனுடைய உடலிலிருந்து பெருகும் இரததததைப பருக வேண்டாமா அந்த நிலமகள்.

‘மாறறு உயிர
எமபியை மாறறிய
மானுடன தன

ஊறறுா குரு
திபபுனல் பாாமகள
உணடிலா ளேல,—

ஏறறுன இகல்
இநதிரன—ஈாிரு
காலஎனக குத்

9 மானுடன தன - லக்ஷ்மணனது. ஊறறுா குருதிப் புனல பார்மகள உணடிலாளேல - ஊறறுயப பாயும் இரத் ததைத நிலமகள பருகாவிடடால, அதாவது லக்ஷ்மணனது இரததததை அப்படியே நான சிநதாவிட்டால்—என்ன ஆகுமா? ஏற்றுன இகல இநதிரன - இநதிரனே என்னோடு போரபுரிநதான ஈாிருகால எனக்குத் தோற்றுன் - நானு

தோற்றான ;—அவற்(கு)
என்றெடும் சேவகம
தோற்க'என றான. (344)

தடவை என்னிடம் தோறறான அவறகு என்னெடும் சேவகம தோறக என்றான – அந்த இந்திரனுககு என்னுடைய மகா பராககிரம வெறறிகளெலலாம் தோறபதாக—லக்ஷமண னது இரததததைச் சிந்தாது போனல

குறிபபு இநதிரஜிததின வீரம என்ன, தந்தை தமபி மாாமீதுள்ள வாஞ்சைதான என்ன, எலலாம அழகாயத துலங்குகின்றன பாததிரத்தை அபூர்வ திறத்தோடு வனைந்திருக்கிறது.

10. கடைசியாகக் கோபாவேசம் ஒருவகையாய் நீங்கி யோசனை செய்யும் நிலைக்கு வருகிருள் சீதை

'வெகு மூர்க்கமான சர்ப்பம் கூட மந்திரத்துக்கு வசமாகிறது பக்கத்திலுள்ளவர்கள் இது தகாத காரியம் என்று சொன்னால் ராவணனும் நேர்வழிக்கு வரலாம் அல்லவா? என்று எண்ணுகிருள் அந்த எண்ணத்தை அவனிடம் சொல்லுகிருள்.

'கடிக்கும்வல் அரவும்கேட் கும்
மந்திரம் களிக்கின் ரூயை
அடுக்கும்ஈ(து) அடாத(து)ஈ தென்(று)
ஏதுவோ(டு) அறிவுகாட் டி
இடிக்குநர் இல்லை,உள் ளார்
எண்ணியது எண்ணிஉன் னை
முடிக்குநர் என்றபோ து
முடிவன்றி முடிவதுண் டோ' (25)

10 களிக்கின்ருயை - ஏதோ உலகத்தை யெல்லாம் வென்று விட்டோம் என்று வெறி கொண்டிருக்கிற உன்னை அடுக்கும் ஈது அடாதது ஈது என்று - இது தகுதியான செயல் இது தகாத செயல் என்று ஏதுவோடு அறிவு காட்டி இடிக்கு நர் இல்லை - காரணத்தை எடுத்துச் சொல்லி உன் அறிவைத் தொழிற்படச் செய்து அக்கிரமத்திற் போகாமல் இடித்துச் சொல்லுகிறவர்கள் இல்லை உள்ளார் - உன்னைச் சுற்றி உள்ளவர்களோ எண்ணியது எண்ணி உன்னை முடிக்குநர் - நீ எண்ணியதையே தாங்களும் எண்ணி உன்னைத் தொலைக்கிறவர்கள் தான் என்ற போது - என்று ஏற்பட்டிருக்கும் போது. முடிவு அன்றி முடிவது உண்டோ - நீ அடியோடு போவதைத் தவிர்த்து வேறு ஒரு முடிவும் உண்டா?

## ஆயிரம் ஆயிரம் படைகள்!

10. அதிகாயனும் மற்றத் தம்பிகளும் எதிரிகளால் மாண்டார்கள் என்று ராவணன் சொன்ன மாத்திரத்தில துயரமும் கோபமும் இந்திரஜித்துக்கு உண்டாய்விட்டன என்பதைப் பார்த்தோம்

'எதிரிகளா கொன்றார்கள்?—நீதான் கொன்றாய்' என்று கூடக் கடிந்து விட்டான் தந்தையைப் பார்த்து.

அடுத்த நிமிஷத்தில் ஒரு வீராவேசமே இந்திரஜித்தின் உள்ளத்தில் கொதித்து எழுந்தது 'இதோ போய அந்த மனுஷன் லக்ஷ்மணனுடைய இரத்தத்தைச் சிந்திவிடுதல் தான் மறுகாரியம். சிந்தாமல்ப் போனால் இந்திரனை ஜெயித்தவன் என்ற பெயர் எனக்கில்லை '

இத்தகைய வீர வார்த்தையை இந்திரஜித்து சொன்ன மாத்திரத்தில் ராவணனுக்குச் சந்தோஷமே உண்டாய விட்டது

'அப்பனே! அப்படிப்போய என்னுடைய துன்பத்தை நீக்கிவிடு. உன்னால் ஆகாதது இவ்வுலகில் என்ன தான் இருக்கிறது?'

ஏகாய், இது
செய்தென(து) இன்னலை
நீக்கி(டு), எந் தைக(கு)

ஆகாதன
வுமஉள வோ!எனக(கு)
ஆறறலார மேல்,

மாகால வரி
வெஞசிலை நீநான
வளைததபோ து

சேகா குமஎன(று)
எணணிஇவ் இனனலில
வாழதலசெய தேன. (345)

10. ஏகாய - இநதிரஜிததுவே அப்படியே செலலுவாயாக. இது செயது எனது இனனலை நீக்கிடு - நீ சொலலுகிற வீரச் செயலைச செயது என துனபததை நீககுவாயாக. எநதைக்கு ஆகாதனவும உளவோ - எனது அபபனுகிய உனக்குச செயய முடியாத காரியம ஒனறு உணடா. எனக்கு ஆறறலார மேல - என்னைவிடச சக்தி அதிகமாய் உளள பகைவர்கள மேல மாகால வரி வெஞசிலை - பெரிய தணடோடும் பலதத கட்டோடும் கூடிய விலலை நீதான வளைத்த போது - எதிரிகளைக் குறிதது வளைத்து விட்டால சேகு ஆகும என்று எணணி - உணமையான பலம் நம் கட்சிக்கு வநதுவிடும என்று எணணியே இவ இன்னலில வாழதல செயதேன - இநதத துயரததிலும் உயிரை வைத்துக கொணடிருநதேன

11. ராவணன் இந்தமாதிரி பேசிய மாததிரத தில் இந்திரஜிததுக்குத் தந்தை மேல் அன்பும் பரிவும் உண்டாய் விட்டது. ராவணனை வணங்கிறுன வணங்கிவிட்டு யுதத சனனததன் ஆகிருன்.

எனருனை
வணஙகி, இலஙு(கு)எயில
வாளுமஆரத திட(டு)

ஒனருனும
அரு,உரு வாஉடல்க
காவலோ டும

பொனதாழ கணை
யினனெடும புடடில
புறத்துவீக கி,

வனதாள வயி
ரசசிலை வாஙகினன
வானைவென ருன (346)

11. எனருனை வணங்கி - எனறு பேசிய ராவணனை வணஙகிவிட்டு இலங்கு எயில வாளும ஆர்தகிட்டு - பிரகாச மான சுட்டியையும வாளையும் அரையிலக கட்டிககொணடு. ஒனருனும அரு உருவா உடலக் காவலோடும - எந்த ஆயுததகி ஞலும் உடைபடாததும் ஊடுருவப படாததுவுமான உடலுககான கவசததை மாட்டிககொணடு. பொனதாழ கணையின - எஃகு முனைகொணட அம்புகள நிறைநத. நெடும புட்டில புறதது வீக்கி - பெரிய தொரு அமபுறாத தூணியை முதுகில கட்டிக்கொணடு வனதாள வயிரசசிலை வாங்கினன - மிக்க பலஙகொணட, எககாரணத்தாலும முறி படாத விலலைக கையில எடுததான. வானை வென்ருன் - தேவேநதிரனையோ தேவர்களையோ எலலாரையும் வென்ற வன் எனறு சொலலககூடிய இநதிரஜிதது.

12. ஆயுத சன்னத்தன் ஆகிவிட்டான் இந்திர ஜித்து

யுத்தத்திற்குப் புறப்படுகிறான். அவனுடைய படையாக எண் நிறைந்த தேர்கள் பக்கததில் நிறைந்து போகின்றன. அபபடியே எண் நிறைந்த யானைகள பின்னல் வருகின்றன யானைகளுக்குப் பினனல் பெருந் திரளான குதிரைப்படை வருகிறது.

இந்தப படைகள பக்கத்திலும் பினனுமாக வர, காலாட்படைகள் மகா சமுத்திரம் போல முன்னேறி நடக்கின்றன

தோஆ யிரம
ஆயிர கோடிதன
மாடுசெல லப

போரா னை
புறதநின அ வறறின
இரடடிபோ தத்

தாரா புர —
விக்கடல் பினசெலத்,
தானை வீ ரப்

12 தன் மாடு செலல - தன் பக்கமாக வர. போரானை புறதநின் அவற்றின் இரட்டி போத - போர்க்கான கொம்பன கள் தேர்களுக்குப் பினனல இரட்டிபபாக வர. தாரார் புரவிக் கடல பின்செல - கழுததில மாலை அணிநத குதிரைப் படைக் கடல் போல யானைகளுககுப் பின வர.

பேரா ழி
முனம்செலச், சென றனன
போச்சிஇல லான (347)

12 தானை வீரப பேராழி முனம்செல — வீரங்கொணட காலாட்படை மகா சமுத்திரம போல முகபபில நடந்து போக சென றனன போச்சி இலலான — ஒரு தேரிலப் போனன — எநதப போரிலும பெயர்நது பின வாஙகாத வீரனன இநதிரஜிதது

குறிபபு : இநதிரஜிதது, ராம — ராவண யுததததில ஒரு முக்கியமான பாததிரம். அதறகிணஙக அவனை ஆயுத சனனததனுககி, மாபெரும் சேனை பலததோடு யுததததுக்கு அனுப்புகிருர் கமபர் சேனைகளின பெருமை ஆயிரம ஆயிரம் எனற ஓசைகளினுலத துலஙகுகின்றன.

# 12. மருத்துமலைப் படலம்

## அப்படியே தழுவிக் கொண்டான்!

1. அதிகாயன் முதலிய மக்கள் இறந்துபோனது பற்றி ராவணன் என்றுமில்லாத துயரத்தில் மூழ்கி இருந்தான்.

இந்திரஜித்துக்கும் தம்பிமார்கள் போய் விட்டார்களே என்று மனம் இடிந்துவிட்டது.

'எல்லாவற்றுக்கும் ராவணன்தானே காரணம்?' என்று எண்ணிய மாத்திரத்தில் அடங்காத கோபம் வந்துவிட்டது தந்தையின்மேலேயே.

ஆயினும் ராவணனுடைய துயரத்தை அறிந்த மாத்திரத்தில் இந்திரஜித்தின் மனம் இளகிவிட்டது, தந்தையின்மேல் அவனுக்குப் பேரிரக்கமே உண்டாய் விட்டது,

'சரி, இருக்கட்டும் இதோபோய் அந்த லக்ஷ்மணனைக் கொன்றுவிட்டு மறுகாரியம் பார்க்கிறேன். கொல்லாவிட்டால் இந்த இலங்கைக்குத் திரும்புவதில்லை' என்று சபதம் செய்துவிட்டுப் போர்க்களத்துக்குப் புறப்பட்டான், அளவில்லாத படைகளுடன் புறப்பட்டான்.

போர்க்களத்தை அடைந்ததும் லக்ஷ்மணனோடும் வானர சேனையோடும் எவ்வளவோ கடூர மான யுத்தம் செய்தான். பகல் முழுவதும் போர் நடந்தது.

மாலை நேரம் வந்ததும் சுற்றுமுற்றும் பார்த்தான், தன்னுடைய படைகள் எல்லாம் மாண்டு கிடந்தன. அநேகர் களத்தைவிட்டு ஓடியும் போய்விட்டார்கள். இந்திரஜித்துக்கு மனம் கசந்து விட்டது.

'சரி, வேறு யுக்தி பண்ணவேண்டியதுதான்' என்று பாசறைக்குப் போனான் பிரம்மாஸ்திரம் என்ற அஸ்திரத்தை உபயோகிக்க வேண்டியதுதான் என்று தீர்மானித்து விட்டான்.

பிரம்மாஸ்திரம் என்றால் அது விஷப் புகையை எடுத்துச் சுற்றிவரக்கூடிய ஒரு கருவி. (ஆஸ்திரேலியா ஜனங்கள் உபயோகிக்கும் 'பூமராங்' போன்ற ஒரு கருவி.)

நடு ராத்திரி ஆயவிட்டது. யுத்தகளத்தில் வானர சேனை எல்லாம் படுத்து உறங்கிக் கொண்டிருந்தன. அப்படியே ராம லக்ஷ்மணர்களும் உறங்கிக் கொண்டிருந்தார்கள்.

அந்த வேளையில் பிரம்மாஸ்திரமானது போர்க்களத்தின் மேலாகச் சுற்றி வந்து விஷப் புகையை வீசியது. விஷப் புகை காரணமாக உறங்கிக் கொண்டிருந்தவர்கள் எல்லாருக்கும் சுவாசமே நின்று விட்டது. உயிர் போனவர்கள் மாதிரி ஆகிவிட்டார்கள்

இதை அறிந்த இந்திரஜித்து "சரி, சரி, நம்முடைய சபதம் நிறைவேறியது. லக்ஷ்மணன் ஒழிந்தான்" என்று பெருமிதங் கொண்டவனாய இலங்கை நகரத்துக்குப் போய்த் தன் அரண்மனையில் நிம்மதியாயப் படுத்துத் தூங்கிவிட்டான்.

இனி நாம் போர்க்களத்துக்குப் போகவேண்டியதுதான்·

போராப படைகள் சம்பந்தமான நிர்வாகம்பற்றி அயலூருக்குப் போயிருந்தார்கள் விபீஷணனும் அனுமனும். வெகு நேரங் கழிதது, நடு ராததிரிக்கு மேல் போாக்களததுக்குத திரும்பினுர்கள்.

வானர சேனைகளும் ராம லக்ஷமணாகளும் உயிரற்ற நிலையில்க் கிடபபதைப பாாததாாகள் இருவரும் திகைததுப் போய மிக்க துயரததில் ஆழ்ந்து விட்டாாகள். ஒனறும் எண்ணத தோன்றவில்லை.

விபீஷணனுக்கு மாததிரம் இது உயிாபோன காரியம் என்று எண்ண இடமில்லை, ஏதோ விஷ வாயு காரணமாக ஏற்பட்ட மயக்கமாகததான் இருக்கவேண்டும் எனறு பட்டது.

'இதுவிஷயமாக ஜாம்பவானிடததில் கேட்க வேணடும். ஜாம்பவான எல்லாரையும் விட வயதில் முதிாந்தவன். அனுபவமும் உளளவன்' என்று அனுமனிடம் சொல்லி ஜாம்பவான இருந்த இடத்துக்கு விபீஷணனும் அனுமனும போனுாகள். விஷயததைச சொன்னுாகளா.

ஜாம்பவான சொன்னுன் 'சரி, சரி, இருக்கட்டும் அதோ மருந்து மலை இருக்கிறது. அதில் ஒரு மூலிகை எதேஷ்டமாய இருககிறது. அந்த மூலிகையை உடனே கொண்டு வரவேண்டும்'.

ஜாம்பவான் சொன்ன மாததிரத்தில் அபபடியே ஓட்டம் எடுததான் அனுமன. மருந்து மலையை

அடைந்தான, மூலிகைகளைப பததாளச சுமை இருக்கும்படியாக ஒரே கட்டாயக் கட்டிக்கொணடு வந்துவிட்டான ஏதோ மலையையே தூக்கிக் கொணடு வந்தமாதிரி இருந்தது.

மூலிகையை அபபடியே போாக்களததுக்குக் கொணடுபோய நெருபபு மூட்டிப புகை எழும்படி செயதாாகள்.

எழுந்த புகையானது வானர சேனைகளள ராம லக்ஷ்மணாா இவாகளுடைய உடலுககுள் பிரவேசித ததும விஷப புகையின் வேகம மடஙகிவிட்டது. உறக்கததிலிருந்து எழுநத மாதிரி வானர சேனைகள் எழுந்தனா. லக்ஷ்மணன எழுநதான கடைசியாக ராமனும் எழுந்தான.

எழுநத மாததிரததில ராமன சுற்றுமுற்றும் பாாததான எலலாருடைய முகததிலும என்றும் காணாத ஒரு சோகததையும் சோாவையும கணடான.

விபீஷணனைப பாாதது 'ஏன இந்தச சோகமும் சோாவும்?'' என்று கேட்டான. விபீஷணன அதற்குப பதில சொன்னான்.

'இந்திரஜிதது பிரம்மாஸ்திரததை உபயோகப படுததினன அதன விஷம் காரணமாக உயிரற்ற நிலைககு வநதுவிட்டீாகள எல்லாரும. ஜாம்பவான சொன்னதினமேல் மருந்து மலைககுபபோய இநத மூலிகையைக கொணடுவந்தான அனுமன. அனும னால்த்தான வானர சேனைகள், தம்பி லக்ஷ்மணன, நீ ஆகிய எல்லாரும் உயிர்தது எழுந்தீாகள' என்று உணர்சசியோடு சொல்லி முடிததான விபீஷணன்.

அனுமனது அரிய பேருதவியை எண்ணின மாத்திரத்தில் அப்படியே உருகிவிட்டான் ராமன்

சூழ நின்ற முனிவர்களும் மங்கள வாழ்த்துச் சொல்லி ஒரே முழக்கமாய் ஆரவாரம் செய்தார்கள்

மனசில் நின்ற பெருந் துயரம் எல்லாம் நீங்கிய வனாய்க் கண்ணீர் ததும்பியவனாய் ராமன் அனுமனைத் தழுவிக் கொண்டான்.

சந்தம்

தான தன்னன
தான தன்னன

ஆய காலையில்,
அமரர் ஆர்த்தெழத்,

தாயின் அன்பனைத்
தழுவினான் தனி

---

1. ஆய காலையில் - அனுமனைப்பற்றி விபீஷணன் சொல்லி முடித்ததும். அமரர் ஆர்த்தெழ - முனிவர்கள் முதலிய பெரியோர் வாழ்த்தொலி முழங்க. தாயின் அன்பனை - தாய் போன்ற அன்புடைய அனுமனை. தழுவினான் தனி

11. ராவணனைப் பார்த்துச் சீதை எவ்வளவோ கேவலமாகப் பேசினாள். 'கோழை' என்றாள். 'வீரன் ராமனுடைய அம்புக்கு இரையாகப் போகிறாய்' என்றெல்லாம் இழிவுபடுத்திப் பேசினாள் அந்த வார்த்தைகள் அவனைப் பாதிக்க வில்லை அவனுடைய எண்ணத்தை மாற்ற வில்லை.

'ஆனால், உன்னைத் திருத்துவதற்கு ஆளில்லையே! நல்லவர்கள் வார்த்தையைக் கேட்டுப் பிழைப் பதற்கும் உனக்கு வழி இல்லையே!' என்று ஒரு பரி வோடு சொன்னாள் இதைக் கேட்ட மாத்திரத்தில் அவனுக்கு இதுவரையிருந்த பணிவு அடக்கம் எல்லாம் போய் விட்டது.

என(று)அறத்துறை
கேட்டலும், இருபது
நயனம்

மின்திறப்பன
ஒத்தன, வெயில்விடு
பகு வாய

11. என்று அறத் துறை கேட்டலும - மேலே சீதை சொன்ன தாம நெறியைக் கேட்டவுடன இருபது நயனம் மின திறப்பன ஒத்தன - இருபது கணகளும மின்னலகளை வெளி விடுவன போலத் தோன்றின, அதேபோல,—வெயில விடு பகுவாய பல்லை நெறு நெறு என்று கடிக்கும் போது பிரகாசம வெளிவந்ததுபோல இருந்தது; இப்போப்பட்ட

நாயகன, துயா
　　நகாநது போயறத்
தூய காதலநீா
　　துளங்கு கண்ணினான. (348)

நாயகன - கட்டி அணைததுககொணடான ராமன துயர் நகர்நது போயஅற - மனசிலப பெரும பாரமாய நினற துயரமெலலாம் மெளள மெளள நீஙகி இலலாமலப போக. தூய காதல நீர் துளங்கு கணணினான - உணமையான அனபி லிருநது கசிநத கணணீாத துளிகள நிறைநது பிரகாசிககும் கணணை உடையவனான-ராமன

குறிபபு: அனுமனுடைய அனபை எணணின மாததிரத்தில ராமனது உளளம், தாஙக முடியாமல் உருகிவிட்டது.

## உன் வயிற்றில் பிறந்து விட்டோம்!

2. இந்திரஜித்து உபயோகித்த பிரம்மாஸ்திரத் தால் வானர சேனைகளும், லக்ஷ்மணன், ராமன் எல்லாரும் உயிர் இழந்த நிலைக்கு வந்தார்கள் என் பதைப் பார்த்தோம்.

அனுமன் கொண்டு வந்த மூலிகையால் அவர்கள் உயிர் பெற்றார்கள் என்பதையும் பார்த்தோம்.

அனுமன் மேலுள்ள பேருணர்ச்சி காரணமாக அவனை மார்போடு அணைத்துத் தழுவிக் கொண்டான் ராமன் என்பதையும் பார்த்தோம்.

அப்படித் தழுவிக் கொண்ட ராமனுடைய மார்பு சாமான்ய மார்பா!

திருப்பாற்கடலில் ஆதிசேஷ சயனத்தில் ஆனந்தமயமாய் இருக்கும்போது விஷ்ணு மூர்த்தி யின் மார்பை லக்ஷ்மிதேவி ஆசையோடு தழுவிக் கொண்டாள்.

அந்த விஷ்ணு மூர்த்தியின் மார்புதானே இந்த ராமனது மார்பு. ஜகன் மாதாவின் ஸ்தன்யங்கள் தழுவிய மார்புதானே அது அந்த மார்பை ஒட்ட லாமா எளியேன் என்று அனுமன் எண்ணி, அப் படியே நழுவி ராமனுடைய பாதங்களுக்கு வந்து விட்டான். பாதங்களைக் கையால் பற்றித் தொழுது கிடக்கிறான் கீழே

சிறிது நேரம் கழித்துத்தான், அனுமன் மார்பி லிருந்து நழுவிய பாதத்தைத் தொழுது கிடக்கிறான் என்பது தெரிய வந்தது ராமனுக்கு.

எழுது குங்குமத்
திருவினை ஏந்துகோ(டு)
உழுத மார்பினை
உருகி, உள்ளுற்றுத்
தழுவி நிற்றலும்,—
தாழ்ந்து தாளுற்றுத்
தொழுத மாருதிக்(கு)
இனிய சொல்லினான். (349)

2. எழுது குங்குமத் திருவினை ஏந்து கோடு — வர்ணக் கோலங்கள் எழுதி அலங்கரித்த லக்ஷ்மி தேவியின் ஸ்தன யுகங்கள் உழுத மார்பினை - ஆசையோடு திளைத்த மார்பின னாகிய ராமன் (விஷ்ணு) உருகி உள்ளுற்றுத் தழுவி நிற்றலும்- மனம் கசிந்து மாரோடு இறுகத் தழுவினின்றான், அப்படியே நின்று கொண்டிருந்தான் சிறிது நேரம் பரவச நிலையில்

தாழ்ந்து தாள் உற்றுத் தொழுத மாருதிக்கு — அட்டா இந்த மாரோடு ஒட்டலாமா நான் என்று எண்ணிக் கீழே தழுவிய பாதங்களைப் பற்றித் தொழுது கிடந்த அனுமனுக்கு இனிய சொல்லினான்— கீழே வரும் வார்த்தைகளைச் சொன்னான் —ஏந்து கோடு உழுத மார்பினை

குறிப்பு ராமனிடத்தில் அளவற்ற பக்தி உடையவன் அனுமன் ராமனுடைய பேரன்புக்கும் மாரோடு தழுவும் பரிவுக்கும் தகுதி அற்றவன் என்று தன்னை எண்ணிக் கொள்ளுகிறான். இந்த எண்ணம் வந்த உடனே மார்பை விட்டு மெள்ள நழுவிப் பாதங்களுக்கு வந்து விடுகிறான் அப்படி நழுவி வரும் செயல், செய்யுளின் ஓசையிலேயே தொனிக்கிறது எழுது — உழுத — தழுவி — தொழுத— என்ற எதுகையில் வரும் சொற்கள் நழுவி இறங்கியதை நினைப்பூட்டுகின்றன.

3 ராமன என்ன சொன்னான் அனுமனை நோக்கி.

'எங்கள மூதாதைகள எல்லாரும் மகான்கள. எந்தக் காரணத்தை முன்னிட்டும சத்தியத்தினின்றும் தாமத்தினின்றும் விலகாதவாகள.

'அந்த மூதாதைகளையே பின்பற்றி அரசு செலுத்தி வந்தான எங்கள தந்தை தசரதன

'அந்தச சத்தியத்தின காரணமாகவே என்னைக் காட்டுக்கு அனுபப நோந்தது. ஆகவே என்னாலேயே பெருந் துயரத்துக்கு உள்ளாகி உயிா துறந்தான. அப்படி உயிா துறந்த தசரதன வயிற்றிலததான பிறந்தோம் நானும் தம்பி லக்ஷ்மணனும்'

முன்னிலத் தோன்றினா
முறையின நீங்கலா(து)

என்னில்த் தோன்றிய
துயரின ஈறுசோ,

3. முன்னிலத் தோன்றினர் - ஆதியிலே எங்கள குலத்தில அவதரித்த பேரரசாகளுடைய. முறையின நீங்கலாது - சத்திய நெறியைவிட்டு நீங்க முடியாதவனாய். என்னிலத் தோன்றிய துயரின-என காரணமாகவே (காட்டுககு வந்த காரணமாகவே) ஏறபட்ட துயரததால. ஈறு சேர்

மனனிலத் தோனறினேம
முனனம மாணடுளேம,—
நினனிலத தோனறினேம
நெறியிலத தோனறினைய' (350)

மனனிலத தோனறினேம — உயிா துறநத தசரத சககரவாத்தியின· மக்களாயததான பிறநதோம. ஆனல — முனனம் மாணடுளேம - கொஞச நேரததிறகு முனபு தான உயிர் போனவாகள ஆனேம், ஆம, உயிர் போனவர்கள தான. நினனிலத தோனறினேம - இபபோது உன வயிறறில உன னுடைய மககளாயப பிறநது விட்டோம.

நெறியிலத தோனறினைய - சாமானயமாய ஒரு பெண வயிறறில பதது மாசம் இருநது பிறநதவன அலல நீ தாம தேவதையின வயிறறில நெடுஙகாலம இருநது பிறநதவன அலலவா நீ-ஆம, நின்னிலத தோனறினேம்.

குறிபபு. நனறி உணாசசி எனபது ஒனறு. அது இதயத்தில நிகழவது, கணணுககுப் புலனுகாதது. ஆனலும் அந்த உணர்சசி ஒரு செய்யுளாயக கணணுககுப் புலனுகிறது, செவிககும் புலனுகிறது. தமிழ பாஷை செய்கிற அறபுதம இது.

## 13. இந்திரஜித்து வதைப் படலம்

### பகையைக் கணித்தவன்தான் நான்

1. 'பிரம்மாஸ்திரததைப் பிரயோகித்தாய விட்டது, எதிரி சேனைகள எல்லாம் இறந்து ஒழிந்து போயவிட்டன' எனற மனபபாங்கில இந்திரஜிதது தன் அரணமனைக்குச சென்று மன அமைதியோடு படுததுத தூஙகுகிருன்.

விடிந்ததும் ராவணனுக்குச செயதி வந்தது, எதிரிகள் சேனைகளோடு யுததம் செயயத தயாராய இருக்கிருர்கள எனபதாக.

'இந்திரஜிதது ஏதோ பகைவாகளை எலலாம் பாக்கி சாக்கி யிலலாமல மாயததது விட்டதாக இரவில்ச சொனனனே! இபபோது அவாகள தயாராக இருக்கிருாகள யுததததிறகு எனபது எபபடி இருகக முடியும்?'' எனற சநதேகம் உணடாயிறறு ராவண னுக்கு இந்திரஜிததைக் கூப்பிட்டு விடடான 'பகைவாகள எலலாரும் ஒழிநதாாகள எனறு சொன னயே! இப்போது அவாகள யுததததுக்குத தயாராய இருக்கிருாகள எனறு தெரிகிறதே! அதெபபடி இருக்கக் கூடும்?'' எனறு கேட்டான

இந்திரஜிததுக்கும் தெரிய வநதது, பிரம்மாஸ் திரததால மாயநது போகவில்லை எதிரிகள எனபது. ஏதோ தந்திரம் செயது பிழைததுக் கொணடாாகள, தன் மாயம் பலிக்கவிலலை எனபதையும் தெளிவாயத தெரிநது கொணடான்.

முந்தின நாள்ப் பகல் யுத்தத்தில் எதிரிகளின் அபூர்வமான சக்தி இன்னதென்று கண்டு கொண்டவன்தானே. எதிரிகளை வெல்லுதல் முடியாதென்ற முடிவுக்கு வந்தான. அதன மேல்த் தந்தை மீதும் தன் இனததார மீதும் பரிவு உண்டாகிவிட்டது. உண்மையைத் தந்தைக்குச சொல்லிவிட வேண்டியது தான் என்று மனதைத் திடபபடுததிக் கொண்டு சொல்லுகிறுன்

'எதிரிகள் பலம் அபாரமானது. இதுவரையும் நமக்குத் தோல்விதானே கிடைததது' ஏதோ என் உயிரைக் காபபாற்றிக்கொளள வேணடும் என்ற ஆததிரததில் பயநது சொல்லுகிறேன் எனறு எண்ண வேண்டாம்.'

இந்த வாாததையை எப்படி ஏற்றுக்கொள்கிறுன் ராவணன?

சநதம

தானன தானன தன
தானன தானன தன

'ஆதலால அஞ்சினேன என(று)
அருளலே, ஆசைதான அச்

1. ஆதலால அஞ்சினேன் எனறு அருளலே – அரககர் குலமெலலாம் அழிநதுவிடும், அது காரணமாகத்தான நான் இபபடிச சொலல நேருகிறது. தயவு செய்து ஏதோ பயநதுவிட்டேன நான என்று எணணவேணடாம்.

சீதைபால விடுதியா யின
அலையவா சீறறநதீர் வா,

போதலும புரிவா செய த
தீமையும பொறுபபா,உன மேல்க

காதலால உரைததேன' என றுன—
உலகெலாம கலக்கிவெனா றுன (351)

2. 'இந்திரஜிததின மனசுக்கு லாப நஷ்டம் தெரியவருகிறது. ஆனாலும் வெறி கொண்ட ராவண னது மனசுக்கோ தெரியவில்லை. வீராவேசம்தான் பொஙகி வருகிறது பேசுகிறுன், 'வாஸதவம், கும்பகாணன் முதலிய பல வீராகள இறந்தாாகள். ஆனால் எனக்குத தெரியும் அவாகள இந்தப பகைவர் களை வென்று தீாக்க மாட்டாாகள் என்பது. மிஞ்சி நிற்கிறவாகள காரியமும் அப்படித்தான என்பதும் தெரியும் எனக்கு.'

ஆசைதான அச்சீதை பால விடுதியாயின — சிறையில வைததிருககிற அநதச சீதையின மேலுளள ஆசையை விடுவாயானால அலையவா சீ றறந தீாவா—அநத ராமலக்ஷமணா் களுககுக கோபம நீஙகும. போதலும புரிவா—இலஙகையை அபபடியே விட்டு விட்டு அயோததிககே போயவிடுவார்கள். செயத தீமையும பொறுபபா — நாம செயத தீஙகையும் பொருடபடுதத மாட்டாாகள உனமேலக் காதலால உரைத தேன என்றுன — நீ க்ஷேமமாய இருகக வேணடுமே என்ற ஆததிரததினலததான இபபடிச சொலலுகிறேன என்று சொனனுன—யார்? உலகெலாம கலக்கி வெனறுன — உலகத திலுளள பகை அரசாகளை எலலாம் நிலைகலஙகச செயதவ னை இநதிரஜிதது.

குறிபபு முநதின நாள இநதிரஜித்தின வீரா வேசததைப பாாததோம ஒரு நாளப பட்ட அனுபவத தால வீராவேசம் எலலாம எப்படி மடஙகி அறிவானது ஒழுஙகுககு வருகிறது எனபதைப் பார்ககிறோம்

'முன்னையோர் இறந்தாரெல் லாம்
இப்பகை முடிப்பாரென் றும்,

பின்னையோர் நின்றாரெல் லாம்
வென்றனர் பெயர்வாரென் றும்,

உன்னை நீ அவரைவென் று
தருதியென(று) உணர்ந்தும்அன் றால்,—

என்னையே நோக்கியான் இந்
நெடும்பகை தேடிக்கொண் டேன்' (352)

2 பின்னையோர் நின்றார் எல்லாம் – இப்போது மிஞ்சி நிற்கிற அரக்க வீரர்கள் எல்லாருமே வென்றனர் பெயர்வர் என்றும் – பகைவர்களை வென்றுவிட்டு வெற்றியுடன் திரும்புவார்கள் என்றும் உன்னை நீ அவரை வென்று தருதி யென்றும் உணர்ந்தும் அன்றால் – நீ பகைவரை விலங்கு போட்டுக்கொண்டு வருவாய் என்று உன்னைக் கருதியும் அல்ல என்னையே நோக்கியான் இந் நெடும்பகை தேடிக் கொண்டேன் – நான்குகப் பகைவர்களை வலியச் சண்டைக்கு இழுத்தேன், நான் ஒருவனே அவர்களை வென்று தீர்ப்பேன் என்ற ஒரு உறுதியினால்தான்.

குறிப்பு அதி அற்புதமான செய்யுள் கம்பரது நாடக இயலும் கவி இயலும் ஒன்றாய்க் கலந்து அபூர்வமான தொனியோடு பேசுகின்றன.

இத்தகைய கவி உருவங்களைப் பார்க்கும் போதுதான் அருள் வாக்கென்றால் இன்னதென்று தெரிய வருகிறது.

## புகழுக்கும் இறுதி உண்டோ!

3. இயற்கையானது சிற்சில அற்புத வேகங்களை வைத்து உயிர் வாக்கத்தை ஓட்டிக்கொண்டு வந்திருக்கிறது. அந்த வேகங்கள் சிருஷ்டி தத்துவத்திற்கு அடிப்படையான கருவிகள் என்று கூடச் சொல்ல வேண்டும்.

சேவல்ப் போர் ஒன்றைப் பார்த்தால் போதும். என்ன ஆவேசத்தோடும் வெறியோடும் ஒவ்வொரு சேவலும் போர் புரிகிறது என்பதை எளிதில் அறியலாம். தன் உயிர் அதற்கு ஒரு பொருட்டே அல்ல. வீரம் என்ற ஒரு தத்துவத்திற்குத் தன்னிடத்திலுள்ள சக்தியை யெல்லாம் அர்ப்பணம் பண்ணுகிறது. உயிரையே அர்ப்பணம் பண்ணுகிறது சேவல்.

சேவலின் உடல் மறைகிறது, உயிர் மறைகிறது. ஆனால் அவைகளுக்குள் அசையாது நிற்கும் வீரம் மாத்திரம் பிரகாசிக்கும். சேவல்ப் போரைப் பார்த்தவர்களுக்குத்தான் இந்த உண்மை தெரியவரும்.

இந்த வீர தத்துவமே சேவல் இனத்தை வளர்த்துக் காப்பாற்றி வந்திருக்கிறது. சேவலின் காரியம் அப்படி நிற்கட்டும்.

மனுஷ வாக்கத்தையும் வளர்த்துக் காப்பாற்றி வந்திருக்கிறது வீர தத்துவம் என்றால் மிகையல்ல.

குன்(று)இ றந்தெழுந்(து)
உரப்பினன், குறிப்பதென.
காமன்
தன்றி றத்தையும்
கடந்தது சீற்றத்தின்
தகைமை (26)

பெரிய வாயிலிருந்து **குன்று இறந்தெழுந்து உரப்பினன்** - எதிரே ஒரு குன்றிருப்பதால் அது தகர்ந்து போகும்படி அதட்டி ஆரவாரித்தான், அவ்வளவு பொல்லாத கோபம். **குறிப்பதென** - இதிலிருந்து அறிந்து கொள்ளவேண்டிய தென்ன. **காமன் தன் திறத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை** - காதல் உணர்ச்சியை வெருட்டி விட்டது அந்தக் கோபத்தின் வேகம்

**குறிப்பு** யாருக்கும் மனச்சாட்சி என்பது ஒன்றிருக்கிறது. தாம் சாஸ்திரங்களையும் தாம் வாழ்க்கையையும் ஆராய்ந்து உணர்ந்தவர்களுக்கோ மனச்சாட்சியின் வேகமும் கூர்மையும் அதிகமாக இருக்கும். அவர்களுடைய இதயத்தை அந்த மனச்சாட்சி அதிகமாகத் தைக்கும். உலகம் கண்ட உண்மை இது. ராவணனது கல்வியும் வாழ்க்கையுமே சேர்ந்து மனச்சாட்சிக்கு மிக்க கூர்மை கொடுத்திருக்கின்றன. அந்த மனச்சாட்சி அவனது மனசை வேகத்தோடு குத்தி விட்டது. அது காரணமாக மன நிலை தடுமாறிக் கோப வெறிக்குள் விழுந்து விடுகிறான். இந்த உணர்ச்சி பாவத்தை செய்யுளில் தெளிவாய்க் காணலாம்.

பார்த்தோம்–சீதை மேலுள்ள ஆசையை விட்டு விடும்படி இந்திரஜித்து ராவணனிடம் நயந்து சொன்னான். அரக்கா குலம் பிழைக்கும் சீதையை விட்டுவிட்டால என்று சொன்னான்.

வந்து விட்டது கோபம் ராவணனுக்கு. 'ஆம்; அரக்க வீராகள் ஏதோ சாதிதது விடுவாாகள் எனறு நான் எண்ணவில்லை, நீ தான் சாதித்து விடப் போகிறாய எனறும் எணணவில்லை. பகைவரைத திரபபது என்றால் ஆகிற காரியமே ஒழிய வேறு அல்ல என்பதைத தெரிந்தே பகையை மூட்டிக் கொணடேன' என்று சொன்னான் ராவணன்

ராவணனிடததில் உளளாகக் கிடக்கும் வீரம் அவனை இன்னும் எபபடி யெல்லாம் ஆட்டுகிறது என்பதைப பாாக்கலாம்

இந்திரஜிததைப பாாததுச சொல்லுகிறான் 'நீ, சொன்னதெல்லாம் வெறும் பைததியக்கார விஷயம்; உலகம் அழிந்தாலும் அழியாத இதிகாசம் ஒனறு என்னுடைய புகழோடு நிலைபெறப் போகிறது, தேவாகளும் காணுவாாகளா. எதை நீரில் உண்டா கிற குமிழி போன்ற நிலையில்லாத இந்த உடலை விடத்தான் போகிறேன. அதுதான இதிகாசம். அதைத் தான் தேவர்கள் காணப்போகிறார்கள.'

'பேதமை உரைத்தாய்,மைந்த;
உலகெலாம் பெயரப்பேராக்

காதைஎன புகழினோடு
நிலைபெற, அமரர்காண,

மீதெழு மொக்குள்அன்ன.
யாக்கையை விடுவதல்லால்

சீதையை விடுவதுண்டோ,
இருபது திணைதோளுண்டாய' (353)

4 'போரில் நான் வெல்லவில்லை என்று வைத்துக்கொள் வேதமும் வேதத்திலுள்ள உண்மைகளும் என்றென்றும் நிற்கும் வரை என் புகழும் நிற்கத

3 மீதெழு மொக்குள அன்ன யாக்கையை—நீரின மேல எழும் குமிழி போனற நிலையிலலா யாக்கையை.

குறிப்பு: 'இருபது திணதோள உண்டாய' என்று முடிக்கிறதில உள்ள வேகம் தனி, ராவணனை நம் முன வந்து நிறகிறான

'இருபது தோள' என்றது இரண்டு தோளின சக்தியை எடுத்துக் காட்ட வந்த அடையாளச் சொலத

தான் செய்யும் அந்த ராமனுடைய பெயர் நிற்குமானால் என் பெயரும் நிற்கத்தானே வேண்டும்?''

'வென்றிலன் என்றபோதும்,—
வேதம் உள்ளளவும், யானும்
நின்றுளென் அன்றோ மற்று அவ்
இராமன் பேர் நிற்குமாயின்;—
பொன்றுதல் ஒருகாலத்தும்
தவிருமோ, பொதுமைத்தன்றே,
இன்றுளார் நாளை மாள்வார்;—
புகழுக்கும் இறுதியுண்டோ' (354)

4 பொன்றுதல் ஒருகாலத்தும் தவிருமோ பொதுமைத் தன்றே - இறக்கிற காரியத்தை என்றைக்காவது தவிர்க்க முடியுமா! சாதாரணமாகத் தினமும் பார்க்கிற காரியமே அல்லவா அது?

குறிப்பு இந்த வார்த்தைகளையெல்லாம் ராவணன் பேசுவதாக வைக்க வேண்டாம். அவனுக்கு உள்ளாக இருந்து அவனை ஆட்டுகின்ற அனாதியான வீர தத்துவமே பேசுகிறது என்று சொல்லலாம். உடைமை, உடல், உயிர் ஒன்றும் பொருட்டல்ல வீரம் ஒன்றே அவனுக்கு லக்ஷ்யமாய் முன் நிற்கிறது. ஆம், அனாதியான வஸ்துதான் வீரம்.

## வருக தேர் விரைவில் !

5. எததனையோ வீரர்கள் மடிந்த போதிலும் இந்திரஜித்து ஒருவன்தான கடைசி வரை யுத்தம் செயது வெற்றியைத தரக்கூடும் என்ற ஒரு நம்பிக்கை யிருந்தது ராவணனுக்கு.

இந்திரஜித்துக்கும் ஒருநாள் லக்ஷ்மணனோடு யுததம் செய்ததில் போதும் போதும் என்றாய் விட்டது. ஏதோ மாய விததைகள் செயது எதிரி களைக் கொனறு விடலாம் என்று பாாததான் அது வும் பலிக்கவில்லை.

எதிரிகளைச் சமாதானப் படுத்தினால்த்தான் ராவணன் காரியமும் அரக்கா காரியமும் ஒபபேறும் என்று எண்ணி மிக்க துணிவோடு தானே சீதையை விட்டு விடும்படி ராவணனிடம் சொல்லிப் பாாத் தான.

ஆனால் ராவணனுக்குக் கோபம்தான் வந்தது அதோடு வீராவேசமும் கலந்து கொண்டது.

'விடுவதற்கு உடைமை, உடல் உயிர் எல்லாம் இருக்கின்றன. சீதையை விட்டுவிடுகிற காரியம் கிடையாது' எனறு கூறினான் ராவணன்.

மேலும், 'சீதையை விட்டுவிட்டால் என்ன நேரும் என்பது உனக்குத் தெரியவில்லை. சிறுபிள்ளை நீ' என்றான்.

'விட்டனன் சீதைதனை
யென்னனும், விண்ணோர்நண்ணிக்
கட்டுவ(து) அல்லாலப்பின்னை
யானென்னக் கருதுவார் போர்
பட்டனன் என்றபோதும்
எளிமையிற் படுகிலேன் யான்,
எட்டினோ(டு) இரண்டும் ஆய
திசைகளை எறிந்து வென்றேன்' (355)

5. விட்டனன் சீதை தனை என்னனும் - சீதையை விட்டு விட்டான் ராவணன் என்ற செய்தி தெரிய வேண்டியதுதான் பாக்கி—உடனே. விண்ணோர் நண்ணிக் கட்டுவதல்லால் - அபாரமான சக்தி படைத்த தேவர்கள் தான் என்று சொல்லக் கூடிய பகை அரசர்கள் யாதொரு பயமும் இல்லாமல் வந்து என்னைக் கட்டிச் சிறையில் அல்லவா வைத்து விடுவார்கள்? ராவணன் என்றும் என்னைக் கருதுவார்களோ? பட்டனன் என்ற போதும் எளிமையிற் படுகிலேன் யான் - உயிரை விட்டபோதும் சாமான்யமாய் விட்டேன் என்று கணக்கில் வரக்கூடாது. எட்டினோடு இரண்டும் ஆய திசைகளை எறிந்து வென்றேன் - எட்டுத் திசையென்ன வானமென்ன பாதாளம் என்ன எங்கெங்கிருந்தாலும் பகைவர், அவர்களைத் தாக்கி வெற்றி கொண்டவன் ஆகிய நான்—எளிமையிலப் படுகிலேன்

குறிப்பு — அபூர்வமான பாவ உருவம் படைத்த செய்யுள்.

6. கோபம் வந்தது, வீராவேசம் வந்தது. அடுத்தாற்போல் இகழ்ச்சி பிறக்கிறது இந்திரஜித்தின் மீது.

'உன்னிடத்தில என்னத்தைச் சொல்லி என்ன செய்ய! போதும், போதும்! மெள்ள உன் ஜாகைக்கு இப்படியே போ, தோளில் ஏதேனும் அம்பு தைத்திருந்தால் அதையும் மெள்ள வெளியே எடுத்துக் கொள். வாஸ்தவந்தான்! யுத்தத்தில் ரொம்ப ரொம்ப சிரம்ப பட்டு விட்டாய்! சிரமத்தை நீக்கிக் கொள்.'

'சொல்லினன் பலவும், நின்ன
இருகையைத் தொடர்ந்து, தோளில்
புல்லிய பகழி வாங்கிப் போகத்
தொழிற் சிரமம் போக்கி
எல்லியும் கழித்தி' யென்று
எழுந்தனன், எழுந்து, பேழ் வாய
வல்லியம் முனிந்தாலன்ன ஒனன—
'வருக தேர் விரைவின்' என்றான் (356)

6 எல்லியும் கழித்தி யென்று - பாக்கியுள்ள இராக் காலத்தையும் சௌகரியமாயக் கழித்துக்கொள் என்று உதறிப் பேசிவிட்டு. எழுந்தனன் - எழுந்து பேழ்வாய வல்லியம் முனிந்தால அன்னான் - எழுந்து நின்றவனாய், பயங்கரமாய் விரிந்த வாயுடன் புலி கோபாவேசங் கொண்டு நின்றது போன்ற ராவணன்—வேறொன்றும் பேசாதவனாய், வருக தேர் விரைவின என்றான்.

குறிபபு இகழசசி பாவததுககு ஒரு புதிய வேகம கொடுககிறது ''வருக தேர் விரைவின'' எனற வார்ததை கள தனித்துத துணடாய நிறபது. அபபடி எழுந்த ராவணனை நோககி இநதிரஜிததானவன 'கோபம வேண டாம, அபபா ! நானே போய அநத நராகளை வெனறு வரு கிறேன' எனறு உறுதி கூறி நடநது செனறுன அபபடி நடநது போகுமபோது தநதை மேலுளள பாசம, பரிவு, காரணமாகக கடைக கணணுல நோககி விட்டு நடககிறுன. கணகளில கணணீர் பெருகிச சொடடுச சொட்டாக உதிர கிறது, வீராதி வீரனை இநதிரஜிததுககு

வீரம, பாசம், இரககம், எலலாம நமது கண முன வருகினறன.

# 14. இராவணன் சோகப் படலம்

## பூமியா புரளுகிறது!

1. இந்திரஜித்து போருக்குப் போனான் என்றால் யாருக்குமில்லாத படையோடும் பரிவாரங்களோடும் அபூர்வமாக அமைந்த தேரில் ஏறிப் போனான் என்பது விஷயம்.

தேர் வருகிற சப்தத்தைக்கேட்டான லக்ஷ்மணன், இந்திரஜித்துதான் வருகிறான் என்று தெரிந்து கொள்ளுகிறான் யுத்தத்துக்குத் தயாராகிறான் அனுமனுடைய தோளில் ஏறிக்கொள்ளுகிறான்.

இந்திரஜித்தின் தேர் போர்க்களத்துக்கு வந்து விட்டது

போர் ஆரம்பமாகிறது லக்ஷ்மணனுக்கு என்றுமில்லாத வீராவேசம் பிறந்து விட்டது அம்புகளைச் சரமாரியாகப் பிரயோகித்தான் இந்திரஜித்தின் ஆயுதங்கள் எல்லாம் ஒவ்வொன்றாய் முறிந்தன.

தேர் அழிந்தது, ஒரு கையும் வில்லுமே அழிந்து விழுந்தன. அதன்மேல் சூலாயுதம் சுக்கு சுக்காய் நொறுங்கிப் போயிற்று கடைசியாக, எய்த பிறைச் சந்திர பாணத்தால இந்திரஜித்தின் தலை அறுந்து தரையில் விழுந்தது. இந்திரஜித்தின் காரியம் முடிந்தது

லக்ஷ்மணனும் சுக்ரீவன், அனுமன் முதலியோர்களும் ராமனிருந்த பாசறையை நோக்கிப் போகிறார்கள்.

போர்க்களத்தையும் போரையும் ஒப்படைத்து விட்டுப் பாசறைக்குப் போய் அமைதி பெற இருந்த ராமனுக்கு அப்படியாக அமைதி வந்துவிடவில்லை

மனசில் கவலைதான். மாயங்களில் வல்லவனை இந்திரஜித்தை வென்று மீளவேண்டுமே லக்ஷ்மணன் என்று சிந்தித்துக் கொண்டே இருந்தான் அவனிடம் வெற்றியோடு மீளுகிறார்கள் லக்ஷ்மணன் முதலியோர் இனி

போர்க்களத்தில் எஞ்சியவர்கள் இந்திரஜித்து மாண்ட செய்தியை ராவணனிடம்சொல்ல இலங்கை நகரத்துக்குள்ச் செல்கிறார்கள் அரண்மனையை அடைந்தார்கள் ராவணனையும் பார்த்துக் கொண்டார்கள். ஆனால் ராவணனைக் கண்டதும் பயம் வந்து விட்டது உடல் எல்லாம் நடுங்குகிறது, நா எழவில்லை.

'என்ன இந்த பயம்?' என்று கேட்டான் ராவணன் வயசான தூதர்கள் சொன்னார்கள் ஐயோ, இல்லையென்று ஆயவிட்டானே இந்திரஜித்து!' என்று நடுநடுங்கி அலறினார்கள்

அவ்வளவுதான்! ஒரு கோபம் பிறந்தது ராவணனது உள்ளத்தில் அப்படியே கையில் இருந்த வாளை அவர்கள் மேல் வீசினான். வாள் எங்கேயோ போய் விழுந்தது

அடியற்ற மரம்போல ராவணன் தடார் என்று தரையில் விழுந்தான். அப்படியும் இப்படியுமாகப் புரண்டான் புரண்டதைப் பார்க்கும்போது நிலமும்

உடன புரணடது போல்த தோன்றுகிறது. ஆதிசேஷனும் தாஙகமுடியாமல பலஙகெட்டு அசைகிறுனே ஏனறு சொல்லத தோனறுகிறது.

படம பிறஙகிய
பாநதளும பாருமபோந(து)
இடமபி றழநது
வலமபிறழந(து) ஈடற,—
உடம(பு)இ றஙகிக
கிடந(து)உழைத(து), ஓஙகுதீ
விடமபி றநத
கடலென வெமபினை. (357)

1 படம் பிறஙகிய பாந்தளும பாரும – எணணறற படஙகளோடு கூடிய ஆதிசேஷன பூமிமேல போநது இடம பிறழநது வலம பிறழந்து ஈடற–நிலைகெட்டு இடது பககமும் வலது பக்கமும் பிறழநது வலி கெட்டுத தவிக்க உடமபு இறங்கிக் கிடந்து உழைதது – திடமான ராவணனுடைய உடம்பு தரையின கீழ இறஙகிக கஷடபபட்டு ஓஙகு தீ விடம பிறநத – வடவாமுகாககினியும் ஆலகால விஷமும் எழுநத. கடலென வெமபினை – கடலைபபோலத துயர வெபபததினால வதைநது கொணடிருநதான.

குறிபபு — தடாாத தடாா எனறு தரையில மோதும் படி விழுவதால தரை பளளம் பட உடம்பு அதில இறங கினதாகத் தோறறம் ஏறபடுகிறது!

# 5 உருக்காட்டுப் படலம்

## காதில் விழுமா அந்த வில்லொலி!

1 அசோக வனத்திலிருந்த சீதையிடம் ராவணன் வந்தான். அவள் காலில் விழுந்தான். தான் படும் வேதனையிலிருந்து காப்பாற்றவேண்டும் என்றே சொன்னான். இந்த வார்த்தைகள், சீதையின் இதயத்தில் ஏதோ ஒரு மூலையில் பதுங்கிக்கொண்டிருந்த கோபத்தை, கோபாக்கினியாக வெளி வந்து வெறியாட்டம் ஆடும்படிச் செய்தன.

கடைசியில் தாம் நெறி இப்படியென்று சீதை சொல்லிக் காட்டினாள். ராவணனுக்குக் கோபவெறி மூண்டு விட்டது. பைத்தியம் பிடித்தவன் போல் ஆகிவிட்டான். வார்த்தைபேச முடியவில்லை. அப்படியே அரண்மனையை நோக்கிப் போய்விட்டான்.

அசோகவனத்தில் நிசப்தம் உண்டாய்விட்டது.

இத்தனை நிகழ்ச்சிகளையும் ஒரு உச்சிக் கிளையிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தான் அனுமன்.

நேரம் நடுநிசி.

'சீதையைக் கண்டு பேசுவதற்கு இதுதான் சரியான சமயம். யாரும் விழித்திருக்கக் காரணம் இல்லை' என்று எண்ணுகிறான்.

'காண்டற்கு ஒத்த
காலமும் ஈதே'

## முந்தினேன் உனை!

2 பத்துத தலைகளைச செதுக்கிச சித்திரித்த கிரீடம் பயததைத உணடு பணணும்தான்

ஒவ்வொரு தலையுமே பயமுறுததுவது போல்த தோன்றும். ஆனால் இபபோது கிரீடததிலுள்ள அநதத தலைகள வேறு விதமாகத தோற்றம் அளிக் கின்றன. தோற்றம அளிபபதெலலாம பாரபபவர் கள் உள்ளததில் நிகழும உணாசசி வழியாகததான.

ராவணனுடைய துயரததோடு கலநது ஒன்றாய் விடுகிறது பாரபபவாகள் உளளம் இது மனுஷ சுபாவம்.

எதிரபாராதபடி இநதிரஜிதது இறந்து பட் டான என்ற காரணமாக ராவணனது மனசில்ப் பலதிறபபட்ட உணர்சசிகள வநது சுற்றிச சுழல் கின்றன:

திருகு வெருசினத
தீநிகா சீறறமும

பெருகு காதலும
துனபும பிறழநதிட

2 திருகு வெஞசினத தீ — கோபததோடுதான சுடர் விட்டுச சுழலகிறதோ இநதத தீ என்று சொலலுமபடியான பெரும் நெருபபை. நிகர் சீறறமும — ஒத்த கோபமும் பெருகு காதலும் — அடககு முடியாத பாசமும துனபும பிறழநதிட — அதோடு மனத துனபமும ஒனறோடொனறு பினனிச சுழல.

இருப தெனனும்
எரிபுரை கண்களுமம

உருகு செம்பென
ஒடிய(து) ஊறறுமநீா (358)

3. அறிவு மயங்கியவனுயத தானே அப்படியும் இப்படியுமாக விழுகிருன்.

சிறிது நேரங் கழிதது உணர்ச்சி வருகிறது. அலறுகிருன்.

மைநத வோஎனும,
மாமக னேஎனும,

எநதை, ஓ!எனும,
எனஉயி ரேஎனும,

2 இருபதெனனும எரிபுரை கணகளும—அககினி போல சிவநது காட்டும இருபது கணகளிலுமே உருகு செமபென ஒடியது ஊறறும நீா — காயசசிய செம்பு உருகி ஓடியது போலக கணணீா பெருககெடுதது ஓடியதாகத தோனறியது.

குறிபபு எலலாம் சோகவெறி மயம் ராவணனைப பாாககும் போது அறிவு பேதலிதது இலலாத காட்சிகளை எலலாம் காணகிறது பாாததுக கொணடிருநதவரது கணகள.

முந்தி னேன்உனை,
யானஉள ளேனும,

வெந்த புண்ணிடை
வேலபடட வெமமையான. (359)

3. முந்தினேன உனை - உனககு முனனுலேயே நான வநதுவிடுகிறேன் அமரலோகததுக்கு யான உளளே எனும் –ஓகோ! நான உயிரோடலலவா இருககிறேன என்று புலம்புகிருன்.

குறிபபு. அபூாவமான சோக பாவம் நிறைநதுள்ள செய்யுள்.

## புகழ் உளதனையும் உள்ளாய்!

4. ராவணனை முதலில் மூர்ச்சித்து அப்படியும் இப்படியுமாக விழுகிறான்.

உணர்ச்சி வந்ததும் 'உனக்கு முன்னால் போய் விடுகிறேன் அமர உலகத்துக்கு' என்று புலம்புகிறான் பிரலாபிக்கிற காரியமும் நின்று விடுகிறது துயரம் ராவணனுடைய உடலையே பாடாய்ப் படுத்துகிறது. படுத்திருந்தவன் எழுகிறான். அப்படியே உட்கார்ந்திருக்கிறான். பேசவில்லை பிறகு நடக்கிறான். அடுத்தாற் போல இந்திரஜித்தை எண்ணி இரக்கம் வருகிறது.

எழும்இ ருக்கும்
நடக்கும், இரக்கமுற(று)

அழும்,அ ரற்றும்,
அயர்க்கும் வியர்க்கும்,போய

4 எழும் இருக்கும் நடக்கும்—எழுகிறதற்குக் கொஞ்சம் நேரமாகிறது, கொஞ்சம் நேரம் உட்கார்ந்திருக்கிறான், பிறகு அங்குமிங்குமாய் நடக்கிறான். அரற்றும் - அடடா! அடடா! என்று கதறுகிறான் அயர்க்கும் - எல்லாவற்றையும் மறந்தவனாய் மயங்குகிறான் வியர்க்கும்-ஒரே வியர்வையாய்க் கொட்டுகிறது தேகம்

விழும,வி ழிக்கும
முகிழகக்கும, தன மேனியால

உழுமநி லததைை,
உருளும புரளுமால. (360)

5 இபபடி யெலலாம அறிவிழந்தவனுய வதை கிருன ராவணன இந்த நிலையில மணடோதரி அங்கு வந்தாள நடு நடுஙகி கீழே விழுகிருள். தரையில்த தலையை முட்டிக்கொளளுகிருள.

ராவணனுக்குக் கொஞசம் உணர்ச்சி வந்து விழித்துப பாாததான. மணடோதரியின துயரததைப் பாாத்ததும் அடஙகாத கோபமே வந்து விட்டது. 'இவ்வளவுககும் அநதச சீதைதானே காரணம்!' என்று கததினை. அபபடியே வாளை எடுததான். 'இதோ அவளைக கொனறு விட்டு மறு காரியம்' என்று ஓடுகிருன

பாாததான மகோதரன பினனுக ஓடியே போய வழி மறிதது ராவணனிடம வாதாடுகிருன.

பஞ்ச பூதஙகளைப பறறிப பேசுகிருன்

4. போய விழும-எஙகேயோ பாாதது நடநது சென்று தடம புரணடு விழுகிருன. விழிக்கும முகிழக்கும - கணணை விரிததுப பாாக்கிருன, அபபடியே மூடிய வணணமாய இருக்கிருன் தன மேனியால உழும் நிலததை-தனனுடைய பருதத முதுகையும் தோள்களையும் கொண்டு தரையைத தேயககிருன — ஏதோ நிலத்தை உழுகிறது போலத தோனறுகிறது உருளும புரளுமால - வெகு தூரம் பட பட வெனறு உருணடு போகிருன, கடைசியில் களைத்துப் போய இடது புறமும வலது புறமுமாகப புரளுகிருன்

'இந்த இலங்கையைச சுற்றிச் சமுத்திரம் இருக்கிறது. அது வற்றுகிறது என்றுணடோ? மேக மண்டலஙகள் வான வட்டததிலிருந்து உண்டாயக் குவிந்து குவிந்து என்றெனறும் இருக்கத தானே செயயும். இந்தப் பரந்த பூமியும் என்றென்றும் இருக்கததானே செயயும் வெற்றிடம் இல்லை யெனறு சொல்லக கூடிய ஆகாயமான வஸது வும் என்றெனறும் இருக்கததானே செயயும. இதோ காற்று வீசி அடிக்கிறதே — அதுவும் என்றென்றும் ஓடிககொணடு தானே இருக்கும.'

நீருள தனையும,சூழந த
நெருபபுள தனையும,நீண ட

பாருள தனையும,வா னின
பரபபுள தனையும,கா லின

பேருள தனையும,பே ராப
பெருமபழி பிடிததிபோ லாம்,

போருள தனையுமவென று
புகழுள தனையுமஉள ளாய! (361)

5. நீருளதனையும - சமுததிரம் உளள வரையும் (நீா-சமுததிரம்). சூழநத நெருபபுள தனையும் - மேக மணடலஙகள உளள அளவும் (நெருப்பு — மேகததுககு அடையாளப பெயா) நீண்ட பாருள தனையும - விஸதார மான பூமி உள்ள அளவும். வானின பரபபுள தனையும — ஆகாயமாகிய வஸது உளள அளவும் காலின பேருள

தனையும் - காறறின அசைதல் உளள அளவும் போரப் பெரும் பழி பிடிதத போலாம் - நீஙகாத பெரும பழியைப் பிடித்துக் கொள்ளுவதறகுப் போன மாதிரி ஓடுகிறுயே! நீ எனறல சாமானயப்பட்ட பேர்வழியா? — பொருள தனையும் புகழுள தனையும் உளளாய அலலவா நீ.

குறிப்பு அறபுதமான பாவம் கொணடது செய்யுள. கமபருடைய முததிரை தெளிவாயக் கிடககிறது. பாடலைப் பார்தது அதிசயிததுக கொணடே இருக்க வேணடியது தான.

# 15. மீட்சிப் படலம்

## மங்களம்

1. இந்திரஜித்தின் மரணம் காரணமாக ராவண னுக்குச் சோக வெறி பிறந்ததையும், அந்த வெறியில் சீதையைக் கொல்லப் போனதையும், மகோதரன தடுத்து விலக்கியதையும் பார்த்தோம்

சோகவெறி தணிந்தது. ராவணனுக்கு வீர வெறி பிறந்து விட்டது 'இதோ அந்த மனிதர் களை ஹதம் பண்ணி விடுகிறேன்!' என்று எழுந்தான், வீராதிவீரர்களையும் என்றுமே தோல்வியே அறியாத சேனைகளையும் சேர்த்துக்கொண்டு போர்க்களம் சென்றான.

அங்கே தயாராயத்தான இருந்தான ராமன்.

ராவணன தனனுடைய அரிய பயிற்சி சாதனங் களை எல்லாம் காட்டினன. வீராவேசம் ஒன்று வந்து எவவளவோ துணை செய்தது அவனுக்கு.

ஆனாலும் ராமபாணங்கள் செய்த தொழில் பிர மிக்கச செய்து விட்டது ராவணனை. அவற்றின் சதுரப்பாடுகளை அனுபவித்துக் கொண்டே தன்னு டைய பாணங்களை ராமன்மேல் பிரயோகித்தான.

கடைசியில் ராமனுடைய அர்த்தசந்திர பாணம் வந்தது அறுபட்டது ராவணேசுவரன் தலை. தரை யிலும் விழுந்தது அது. ராமனது வீரமும் தர்மமும் வெற்றி பெற்றன. சீதையும் மீட்கப் பட்டாள்.

அரக்காகளுக்குச் செயயவேண்டிய ஈமக் கடன் களை எல்லாம் விபீஷணன் செயது முடித்தான்.

விபீஷணன்என்ன, சுக்ரீவன்என்ன, அனுமன் என்ன, வானர வீராகள் என்ன எல்லாருமே இலங் கையை விட்டு அயோததிக்குப புறப்படுகிறுர்கள். லக்ஷ்மணனது ஆனந்தத்தையும் சீதா தேவியின் ஆனந்ததததையும் வாாததைகளாலச சொல்லததான் முடியுமா? இனி நாம் அயோததிக்குப போகிறேம்.

அயோததி இபபோது என்ன நிலையில் இருக் கிறது?

பதினுலு வருஷமாக பரதன் ராமனை எதிா பாாததுக் கொணடுதான இருக்கிருன். தினம் தினம் தெற்குத திசையை, 'வரமாட்டாரு ராமன, இன்று வரமாட்டாரு' எனற ஏக்கததோடு பாாக்கிருன். வர வில்லை

நாட்கள் கழிகினறன. மாசங்கள் கழிகின்றன. வருஷஙகளை ஒன்று, இரண்டு மூன்று எனறு கழி கின்றன. பதினுலு வருஷஙகளும் கழிந்து விட்டன.

ராமன் வருவதாகக் குறிபபிட்டிருநத நாளும் விடிந்து விட்டது. கோபுரததில் ஏறினன் பரதன். தெற்குத திசையை நோக்கினை. ராமன வருகிற தான சின்னமே இல்லை.

'இனி யோசனைக்கு இடமில்லை. சரி, சரி. பரதனே ஆணடு கொண்டு இருக்கட்டும். அந்த ஆட்சியைக் கலைபபானேன் என்று எணணி

எங்கேயோ போய் விட்டான் ராமன். அவ்வளவு தான் என்னுடைய பிரதிக்ஞையை நிறைவேற்ற வேண்டிய கடமை என்னுடையது' என்று முடிவு செயது பெரிய அக்கினி குண்டம் ஒன்றை வளர்க்கச் சொன்ஞன்

தாய்மார்கள, பிரமுகர்கள், முனிவர்கள் எல் லோரையும் கூப்பிட்டு விட்டான். 'பிரதிக்ஞைப்படி இன்று அக்கினிப பிரவேசம் செய்யப் போகிறேன், இனிமேல் ஒரு விஞடி இந்த உயிரை வைததுச் சகித்துக் கொண்டிருக்க முடியாது' என்று சொல்லி விட்டான்.

பலரும் வாதாடிப் பாாத்தார்கள வாதாடுவது பிரயோசனம் இல்லை என்று தெரிந்து அபபடி அப்படியே நினறு விட்டாாகள்.

அந்தச் சமயம்தான் அஙகு வந்து சோந்தான் தம்பி சததுருக்கனன. சததுருக்கனனிடம் பரதன் சொல்லுகிறுன். 'உனக்குத தெரியும் சித்திரகூட பருவதத்தில் வைத்து ராமன் சொன்னது, 'பதினுலு வருஷத்தில்த் திரும்பி வந்து விடுகிறேன்' என்று சொன்ஞன். வராதுபோஞல் அக்கினிப பிரவேசம் செய்து விடுவேன் என்று நான் சொன்னதும் உனக்குத தெரியும். இன்றுதான அவன் வர வேண்டிய நாள் — வரவில்லை

'அக்கினிப் பிரவேசம் செய்யப் போகிறேன், நீ ஒரு காரியம் செயய வேணடும். கொஞ்ச காலம் கழித்து வருவான் ராமன். அது வரையும் நாட்டை நீ ஆள வேண்டும். பிறகு ராமன் கையில்ச் சேர்த்து விடவேண்டும்.'

அடுத்தாற்போல்க் கொஞ்சம் கீழாயுள்ள கிளையில இறங்கிப பாாததும் கண்ணுக்கு என்ன தெரிகிறது? ஒரே விழிபபாய் சீதையைச சுற்றி வட்டமிட்டுப் பல அரக்கிகள் உட்காாந்திருப்பது தெரிந்தது. அவாகளுடைய முகததிலும் கண்களிலும் சோர்வு என்பது கொஞ்சமுமில்லே. அவர்களுடைய ஜாக்கிரதையைப பாாததால் காவலுக்கு அதிதேவதையான காவல்த தெயவததுக்குத தூக்கம் வரும் என்று வைததுக்கொணடால, அந்த தெயவததையே (தெறு காவல்) ஒரு அடி அடிதது 'எனன தூக்கம்!' எனறு தூணடக கூடும்! — அவாகளுடைய விழிபபு அபபடி இருந்தது!

அனுமனுககு மனம் இடிநது விட்ட தெனறால குற்றமில்லே

'தெறுகா வல
தூணடற கொதத
சிநதையி ருரோ
துயிலகில் லாா'

ஆனாலும, அனுமனுக்கு அநதத தருணததில் தனனுடைய மந்திர சக்தி நினைவுக்கு வந்தது. உடனே சிரிபபே வநது விடடது 'அபபடியா, கெஞ்சிக் கேட்டால் தூஙகவா செயவாாகள் எனறு மனசுக்குள்ச சொல்லிக்கொணடு ஒரு மந்திர விததை செய்ய ஆரம்பிததான்

'வேணடத் துஞசாா,'
எனறொரு விஞ்சை
வினைசெய தாலை

இந்த வார்த்தைகளை ஒரு விதமாகக் கேட்டுக் கொண்டிருந்தான் சத்துருக்கனன். சிறிது நேரம் மௌனமாக நிலைருன். பிறகு பேச்சு வந்தது. எப்படி வருகிறது பாருங்கள்!

தம்பி என்ற பதத்துக்கு இலக்கணம் சொல்லு கிருன.

'தாளை [1]நிலமகளைக்
கைவிட்டுப் போனவனைக்
காத்துப்பின்பு

போனும் ஒருதம்பி,
போனவர்கள் வரும் அவதி
போயிற்றென்று

1 காளை நிலமகளைக் கைவிட்டுப் போனவனை-ஜ்யேஷ்ட புத்திரனுகப் பிறந்தவன் ராமன் அவன் ராஜ்யத்தை ஆள வேண்டும் அந்த ராஜ்யத்தைப் பரிதவிக்க விட்டு விட்டுக் காட்டையல்லவா ஆளப் போயிருக்கிறன் அப்படிப் போனவனை. காத்துப் பின்பு போனும் ஒரு தம்பி - காப்பதற்காகப் பின்தொடர்ந்துபோன லக்ஷ்மணனும் ஒரு தம்பி. போனவர்கள் வரும் அவதி போயிற்றென்று - அப்படிப்போன ராமலக்ஷ்மணர்கள் திரும்பவேண்டிய நாள் முடிந்துவிட்டதென்று.

ஆறாத உயிர்விடஎன(று)
அமைவானும் ஒருதம்பி,—
அயலேநா ணு(து)

யாருமிவ் அரசாள்வென்!
என்னேஇவ் அரசாட்சி!
இனிதேஅம் மா! (362)

2. சுற்றியிருந்த மக்கள் என்ன செய்வார்கள்?—சகிக்க முடியாத துக்கத்திலும் வேதனையிலும் மூழ்கிக் கிடக்கிறார்கள்.

அந்தவேளையில் 'வந்துவிட்டான் ராமன், ராமன் வந்துவிட்டான்' என்ற சப்தம் கேட்டது

அனுமன் ஓடி வந்தான். அக்கினிக் குண்டத்தை அப்படியே கையினல் தேய்த்து அழித்தான். 'ராமன் வந்துவிட்டான், வந்துவிட்டான்' என்று கைகொட்டிக் கூத்தாடினான்.

ராமன் வருகிற விஷயத்தைப் பிறகு எடுத்துச் சொன்னான்.

1 ஆறாத உயிர்விட என்று அமைவானும் ஒரு தம்பி — உடலைவிட்டுப் போகமாட்டேன் என்று சாதித்துக் கொண்டிருந்த உயிரை இன்று விட்டுவிடலாம் என்று எக்களிப்போடு கிறகிற நீயும் ஒரு தம்பி அயலே நாணாது யாரும் இவ் அரசாள்வென — மூன்றாவது தம்பியாகிய நான் லஜ்ஜையில்லாமல் நாட்டை ஆளுகிறது எப்பேர்ப்பட்ட காரியம். என்னே இவ் அரசாட்சி இனிதே அம்மா — இது ஒரு அரசாட்சியா. சுகமான அரசாட்சிதான், என்னத்தைச் சொல்ல:— என்பதாக மனம் கசந்து இதயம் துடித்துப் பேசுகிறான் சத்துருக்கனன்.

பரதன் மனசில் ஒரே ஆனந்தப் பெருக்கு. வெறியே உண்டாய் விட்டது. ராமனைக் கண் கொண்டு பார்க்க அல்லவா போகிறோம் என்ற ஆனந்த வெறி பரதனை என்ன பாடெல்லாமோ படுத்துகிறது.

வேதியர் தமைத்தொழும்
வேந்தரைத்தொழும்,
தாதியர் தமைத்தொழும்,
தன்னையேதொழும்!
ஏதுமொன்(று) அறிகிலான்
இருக்கும் நிற்குமால்!
காதலென்ன றீதுமோ
கள்ளின் தோற்றதே! (363)

---

2 வேதியர் தமைத் தொழும்-வேதியர்கள் நின்ற இடத்துக்குப் போய்த் தரையில் விழுந்து தொழுதான்— 'நீங்கள் பிரார்த்தனை செய்தீர்கள், ராமன் வந்துவிட்டான், உங்களுக்கு என் நன்றி' என்று கூறி வேதியரைத் தொழுவது இயல்புதான்.

வேந்தரைத் தொழும் - தனக்குக் கீழான சிற்றரசர்களையே தொழுதான்— இது கொஞ்சம் கோளாறுதான், பிறகு

தாதியர் தமைத் தொழும் - வேலை செய்யும் பெண்கள் இடத்துக்குப் போய்க் காலில் விழுந்து தன் நன்றியைக் கூறினான் இது பைத்தியம்தான்

கடைசியாக, தன்னையே தொழும் — ஒரு தூணுக்கு எதிரே போய் 'ஏ பரதா! ராமன் வரவேண்டுமென்று நீ பிரார்த்தித்தாய் ராமன் வந்து விட்டான்! உனக்கும் என்

பரதனது உள்ளத்திலுள்ள ஆனந்த நிலையை அற்புதமாகச் சித்திரிக்கிறது பாடல்.

அடுத்த நிமிஷமே ராமன், லக்ஷ்மணன், சீதை மூவரும் வந்து விட்டார்கள். விபீஷணன முதலான வர்கள் மற்றுமுள்ள வானர வீரர்கள் எல்லாரும் வந்து விட்டார்கள். ஆனந்த வெள்ளம் எங்கே பார்த் தாலும் பெருக்கெடுத்து ஓடுகிறது. ஜனங்கள் அதில் திளைக்கிருர்கள்,

வாத்திய கோஷங்களுக்கு இடையே நடக்கிறது ராம பட்டாபிஷேகம்

மங்களம். மங்களம. மங்களம.

நனறி'— எனறு தூணைப பார்ததே பேசுகிருன. இது பைததியமேதான. கள்ளைக குடிததவன காரியம்தான். ஏதும் ஒன்று அறிகிலான - ஒன்றும அவனுககுச சரியானபடி புலபபடவிலலை தாறுமாருகவே தோன்றுகிறது—ஆனநத வெறியில.

இருக்கும நிறகுமால — தரையில உட்கார்நது பதது நிமிஷம அபபடியே இருக்கிருன பிறகு எழுநது நினறுன. ஒரு வாாததையும பேசாமல நெடுநேரம் நிறகிருன. இதை எலலாம பார்க்கிருர கம்பர். என்ன சொலலுகிருர்?

காதல எனறு ஈதுமோர் கள்ளின தோறறிற்றே - சகோதர வாஞ்சை என்கிற இநதச் செயல எலலாம் கள்ளின வெறி யாகத தான நிறகிறது.

# அனுபந்தம்

## திருத்தங்கள்

### சுந்தர காண்டம்

| செய்யுள் எண் | அடி | திருததம |
|---|---|---|
| 1 | 3 | அவரனறே |
| | 4 | எனபர் |
| 2 | 1 | அமைதத |
| | 2 | இழைதத |
| 3 | 3 | இருவரில ஒருவரை |
| 4 | 1 | போகலோ |
| 5 | 3 | இறநதமை |
| | 4 | வேல |
| 10 | 2 | யான |
| 13 | 4 | உறறிடறகு |
| 14 | 3 | அக |
| 15 | 4 | நோறறில கணகளே |
| 18 | 3 | ஆசைபபாடுடன |
| 21 | 3 | ஙினறும |
| | | பாாததிலள உறுவ |
| | 4 | அலல |
| 22 | 2 | ஈரெழு |
| 23 | 4 | வீராககு |
| | | அடாதன செயயத தககோய |
| 24 | 2 | கணடாய |
| | 3 | அவை |
| 25 | 2 | ஈதெனறு |
| 27 | 2 | சிநதையிஞரோ |

| செய்யுள் எண் | அடி | திருத்தம் |
|---|---|---|
| 29 | 1 | கடலே |
| 36 | 1 | இயறறுவேன |
| 46 | 2 | சானறுதான |
| | 3 | வேணடுமோ |
| 48 | 1 | வேரும |
| | 2 | ஒருவலோ |
| | | நீங்கி |
| 50 | 3 | ஆணடாங நகா |
| 51 | 2 | வளளை |
| | | என |
| | 3 | வளாததல |
| | 4 | தன |
| 57 | 2 | எளியதுணடோ |
| 58 | 3 | பகலா |
| 60 | 1 | வாரியள |
| | 2 | நெஞசினள |
| 63 | 1 | சுட்டினில |
| | 4 | உணாவொடு |
| 64 | 4 | சிநதையாள |
| 68 | 3 | கினறேன |
| 69 | 3 | கழபகள |
| 70 | 1 | இவண ஒனறுமிலை |
| 71 | 3 | நீட்டி பயன |
| 73 | 2 | வளா |
| 76 | 1 | இன்று |
| | 2 | பெறும |
| 77 | 2 | பகாகினறேன |
| 78 | 3 | இலலை |
| 81 | 3 | ஆா |

| செயயுள எண | அடி | திருததம |
|---|---|---|
| 84 | 4 | எனனை கொல |
| | | உள உளேன |
| 86 | 2 | ஒழிநதிலள தையலாள |
| | 3 | ஏ வெவவை |
| 87 | 1 | வீவாயே |
| | 3 | புககஙகே |
| 93 | 1 | இக |
| 95 | 1 | தூசினிலச சுறறினன சுறறி |
| | 2 | பநதிதது |
| 96 | 1 | இலலையாய |
| 100 | 1 | இவண |
| 102 | 3 | கைகொடு |
| 103 | 2 | வணடியல |
| 105 | 2 | மாணபுககும |
| 106 | 2 | வாயதத |
| | 3 | நோநத |

## யுத்த காண்டம்

| | | |
|---|---|---|
| 109 | 2 | ஆம எனறுரைககில |
| | 3 | உணடே எனனில உணடேயாம் |
| 112 | 4 | ஆணையால |
| 113 | 3 | எவ எழில |
| | 4 | வெவ எழில |
| 114 | 3 | தரமபெறு |
| 118 | 2 | அழிநது மாணடதால |
| 119 | 2 | கடிநகா |
| | 4 | இட்டஇவ |
| 121 | 3 | இறநதிலம் |

| செய்யுள எண | அடி | திருததம |
|---|---|---|
| 122 | 4 | உறுததும் |
| 123 | 3 | அறிவித்தேன |
| 125 | 3 | உலகின |
| 126 | 1 | அதை |
| 128 | | (மகோதரன பேசசு) |
| 130 | 1 | இடுககினி இயம்புவ(து) எனனே |
| 131 | 4 | ஆயுமிது |
| 132 | 3 | தவ்வன |
| 133 | 1 | நிலநில எனறு — நீயிவண |
| | 2 | எளியை |
| 135 | 1 | கருதும |
| 136 | 2 | விளேவு |
| | 3 | செலவதும — தேயதது |
| 138 | 1 | முரணது |
| 140 | 2 | நனறினில |
| | 3 | எணணம |
| 141 | 4 | நெருபபின |
| 143 | 1 | நிலைமையீது, ஆறறலீது |
| | 2 | தாழவினே |
| 144 | 3 | தகையுடைததாம அமர் சமைதலதான எறு. |
| 145 | 1 | உறு |
| | 2 | இல எனறு |
| 146 | 3 | இதை |
| 147 | 1 | அதறகு |
| 148 | 1 | வெம |
| 149 | 1 | உறுவதன |
| | 2 | வானராகள |
| 150 | 2 | ஒனறி இனி |

நடந்தாய இடையே எனறு னும
நாளும் நினககு நளிரகட லைக்

கடந்தாய எனறுல எனனு கும் !
காறறும அனன கடுமை யாய் !' (66)

41. அனுமன் சக்தியைப பாாதத சீதைககு அதிசயம் தணிந்த பாடாக இல்லை. மேலும் மேலும் பொங்கிக்கொணடுதான் இருக்கிறது.

'நீ இஙகு வந்து பல இடஙகளையும் தேடிக் கடைசியாக எனனைக் கண்டுகொணடாய. அபபடிக் காணுமற் போனல் ராமன் வந்து என்னை மீடகிறது

40 நடநதாய இடையே எனறுலும நாளும நினக்கு — ஒரு காலைப பரத கணடததில வைத்து மறறொரு காலை இலஙகையில வைதது அபபடியே நடநது வநது விட்டாய் எனறு சொனனுலும் அது உன பெருமையைக் குறைபபதே யாகும, லஜ்ஜைப படவேணடிய காரியம் அது உனககு. நளிர கடலைக கடந்தாய எனறுல எனனுகும — அநதக் குளிாந்த நீா நிறைநத கடலைக கடநது விட்டாய என்று உனனைப புகழ்நதால அதறகுப பொருள உணடா? காறறும அனன கடுமையாய — உலகெங்கும் அதிவேகததோடும அறபுத சகதியோடும் திரிநதுகொணடிருககிற காறறின வலிமை அலலவா உனககு இருககிறது இததகைய உனககு மேலே சொனனதெலலாம் ஒரு புகழ்ச்சியா!.

குறிப்பு செய்யுளிலுள்ள ஓசையும் நீணட தாளமும் பெருமித பாவத்தை நனருய்க் காட்டுகினறன அனுமனை எங்கேயோ' தூக்கிகொணடு போய்விடுகினறன.

என்பது உண்டா? மீட்கவில்லையானால் அவனுக்கு அருளில்லை என்றுதானே சொல்லுவார்கள், உலகத்தார் தாரது பழிதானே வந்து சேரும். உன்னால் அல்லவா ராமனுக்குள்ள அருளும் புகழும் உலகததில் நிலையாய் நிற்கப் போகின்றன.'

'ஆழி நெடுங்கை ஆணதகை தன
அருளுமம புகழுமம, அழிவின றி
ஊழி பலவுமம நிலைநிறுத தற்(கு)
ஒருவன நீயே உளையா னய்,
பாழி நெடுநதோள வீரா, நின
பெருமைக(கு) ஏறபப பகைஇலங கை
ஏழு கடறகுமம அபபுறத த(து)
ஆகா(து) இருநத(து) இழிபன றே!' (67)

41. ஆழி நெடுங்கை ஆண்தகைதன - தோளில அணிநத வளையங்கள கையின நீளததைக் காட்டும் அபபடிக் காட்டும்படியான வீரன ராமனது. ஊழி பலவுமம - பல பல யுகஙகளிலுமம ஒருவன நீயே உளையானய - நீ ஒருவனதான உலகத்தில இருககிறாய்,— வேறு யாருமம இலலை. பாழி நெடுநதோள வீரா - வலிமையோடு பெருமையுங கொண்ட தோளபடைதத வீரனே நின பெருமைக்கு ஏறப - உன சக்தியின் பெருமையை எடுததுக காட்டுமபடியாக பகை இலங்கை-பகைவர்கள தஙகும் இநத இலஙகைத தீவானது. ஏழு கடறகுமம அபபுறததது ஆகாது இருநதது - ஏழு சமுத்திரங களுககும் அபபாலதாய் இலலா திருநதது இழிபு அனறே - உனனுடைய சகதிககுச சற்றும் ஒவவாத இழிநத காரியம்

குறிபபு — காலததின நெடுமை 'ஊழி பலவும்' என்ற ஓசையில கிடக்கிறது, அபபடியே பரபபின் பெருமை 'ஏழு கடறகும்' என்ற ஓசையில கிடக்கிறது

42. மனசிலுண்டான அதிசயத்தையும் ஆனந்தததையும் அனுமனிடம் நேர்முகமாகக் கொட்டியாகி விட்டது உணர்ச்சி அதற்கு மேலும் போகிறது. தனக்குத்தானே பேசிக்கொள்ளுகிறுள சீதை.

'அரக்காகளுடைய தொகையோ கணக்கில் அடஙகாதது. ஆனுல் ராமனுக்கு, அடடா! தம்பி லக்ஷமணனைத தவிாததுத துணையாக வேறு ஒரு பிராணியும் இல்லையே, என்று மனம் நைந்து கொண்டேயிருந்தேன'

'மினனோா எயிறறு வலஅரக கா
விககம நோககி, வீரறகுப
பினனே பிறந்தான அலலதோா
துணையி லாத பிழைநோக் கி,
உனறு நினறேன, உடைகிலறேன
ஒழிநதேன ஐயம, உயிாஉயிாத தேன,
எனனே! நிருதா எனறு வா,
இவனே எஙகோன துணைஎன ருல!' (68)

42 மினனோா எயிறறு வல அரககா விக்கம நோக்கி — கோபததில மினனலபோல ஒளிவீசும பறகளையுடைய அரககாகளது பெரும் கூட்டததைப பார்தது. வீரற்குப் பினனே பிறநதான - லக்ஷமணன துணையிலாத பிழைநோக்கி - துணையெனறு யாரும இலலாத கஷட நிலையை நோககி உனறு நினறேன - யோசனை பணணினேன உடைகினறேன - மனம நைநகினறவளாகிய நான ஒழிநதேன ஐயம - சநதேகமே யிலலாதவள ஆயவிட்டேன. உயிா உயிாததேன — புததுயிர் பிறநதுவிட்டது எனனே - எனன அதிசயமாக இருககிறது இதெலலாம்,— நிருதர் என ஆவா - அரககா வேரோடு ஒழியாமல எனன ஆகப போகிறுாகள இவனே எஙகோன துணை எனருல - இநத மகா வீரனை ராமனுககுத துணை எனறிருககும்போது

குறிபபு அறபுதமான துணை ராமனுக்குக கிடைத்து விடடது எனபதில சீதைககு அபாரமான எக்களிபபு; அது செயயுளில வாயவிட்டுப பேசுகிறது

43. சிறையிலிருக்கும் சீதைக்கு ஒரே எக்களிப்பு 'உலகத்தில்க் காண முடியாத அன்பையும் அருளை யும் அல்லவா ராமன் என்னிடத்தில காட்டுகிறுன். இந்தச் சிறையிடந்தான் தெரிந்து விட்டதே அவனுக்கு. அனுமன் அல்லவா துணை' என்றெல்லாம் எண்ணுகிருள். 'ஜன்ம சாபல்யமே கிடைத்து விட்டது, இந்த க்ஷணமே உயிர் போகட்டும், ஒரு குறையுமில்லை' என்று அபூர்வமான பெருமிதத் தோடு பேசுகிருள்.

'மாண்டேன் எனினும் பழுதன் றே,
இன்றே மாயச் சிறைநின் றும்
மீண்டேன், என்னை ஒறுத்தா ரைக்
குலங்க ளோடும் வேர றுத் தேன்,
பூண்டேன் எங்கோன் பொலங்கழல் கள,
புகழே யன்றிப் புன்பழி யும்
நீண்டேன,' என்று மனமகிழ்ந் தாள—
திருவின் முகத்துத் திருவன் னாள் (69)

43 இன்றே மாயச்சிறை நின்றும் மீண்டேன்-யாராலும் கண்டுபிடிக்க முடியாத இந்தச்சிறையினின்றும் இப்போதே மீண்டேன் என்னை ஒறுத்தாரை - என்னைத் துன்புறுத்திய அரக்கரை பூண்டேன் எங்கோன் பொலங் கழலகள - என் நாயகன் ராமனது அழகிய திருவடிகளைத் தலைக்கு அணி யாகப் பூண்டு கொண்டேன்—ராமனை வணங்கும் பாக்கியம் இப்போதே கிடைத்து விட்டது. புகழே யன்றிப் புன்பழியும் நீண்டேன் - புகழ் என்னைவந்து அடையுமே அல்லாமல் கேவலமான பழி என்னை அடையாது திருவின் முகத்துத் திரு அன்னாள—ஆனந்தமும் அழகும் முகத்திலப் பொங்கிய லக்ஷ்மிக்குச் சமானமான சீதை.

குறிபபு மீளாச் சிறையில இருநத சீதையின் மனதில் எததனையோ ஆசைகளும் ஏககஙகளும் வந்து வநது போகும. அவவளவும் சித்தியாயவிட்டால என்ன ஆனநதம் ஏறபடுமோ அநத ஆனநதம் ஏறபட்டு விட்டது, அனுமனைப் பார்தத மாத்திரததில். அநத க்ஷணமே உயிர் போய விட்டால குறறமிலலை எனபது, ஒரு அறபுத ஆனநதத்தின் உசசததைக காட்டுகிறது

# 6. சூடாமணிப் படலம்

## ராமனிடம் சமர்ப்பிக்கிறேன் உன்னை!

1. பாாததான அனுமன்-சீதையின் அன்பையும் ஏக்கத்தையும்' 'ராமனைக கிட்டாமல் இருந்தால் இவள் பாடு என்ன ஆகும்? அரக்காகளால் இவளுக்கு என்ன ஆபதது வருமோ? அடடா, துணை என்று சொல்லுவதற்கு இங்கு ஒரு வஸ்துவு மில்லையே' என்று நைகிறுன

சநதம

தான னன தன்ன னன
தனன னன தன ன

'உணடு துணை எனன, இவண
ஒனறு மிலை அமமா,

புணடரிகை போலும இவள
இனனல புரி கின றுள,

1 உண்டு துணை என்ன இவண ஒனறுமிலை அம்மா-துணை யெனறு இங்கே அடடா ஒன்றுமே இலலை, (அம்மா· அடடா!) புணடரிகை போலும இவள-தாமரையில இருக்கும் லக்ஷமி போனற இவள். இன்னல புரிகின்றுள-எவவளவோ துன்பததை அனுபவிக்கிறுள்.

அணட முதல் நாய கன(து)
ஆவி அனை யா ளைக்

கொண்(டு) அகல்வ தேக ருமம'
என று ணாவு கொண் டான. (70)

2. சீதையின் பரிதாப நிலை யைய பார்க்க இயலாதவனுய, அவளை அப்படியே எடுதது்க் கொண்டு போவதே சரியான காரியம் என்று எண் ணிணுன். அதைச் சீதையிடம் சொல்லுகிருன 'தாயே நான் சொல்லுவதைக் கேட்க வேண்டும், என்னைக் கோபிக்கக் கூடாது. பகைவர்கள உங்கள் உயிரை வாங்கி விடுவது என்று ஏற்பட்டு விட்டால்! - பிறகு அந்த ராவணனை வெல்லுவது ஒரு காரிய மாகுமா?'

'கேட்டி அடி யேனஉ ரை;
முனிநத ருளல, கே ளாா

விட்டி யிடு மேல,அ வனை
வேறல வினை அன ருல

1 அணடம முதல நாயகனது ஆவி அனையாளை – பரப பிரம்மததோடு ஒததுச் சொலலவேணடிய அநத ராமனுககு உயிர் போனற இவளை. கொணடு அகலவதே கருமம எனறு – எடுத்துக் கொணடு திரும்புவதே என் கடமை எனறு உணர்வு கொணடான - உறுதிபணணி விட்டான

2. கேடடி அடியேன உரை-என வார்ததையைக கொஞசம கேட்கவேணடும. முனிநது அருளல-தயவு செய்து கோபிக்காமல இருக்க வேண்டும். கேளாா விட்டி யிடுமேல- பகைவர்கள உன்னை மாயத்து விட்டாலோ! அவனை வேறல வினை அன்ருல - அநத ராவணனை வெலலுதல ஒரு காரியம் அலலவே.'

நீட்டி யினி என்ப யன,
இராமன எதிர் நின னைக்

காட்டி அடி தாழவென இது
காணடி; இது கா லம' (71)

2 வேறல - வெலலுதல உன பொருட்டுததானே அவனோடு போா செயயவேணடும, நீட்டி இனி என பயன- இநத விஷயமாக நான நீளமாய்ப பேசுவதால என்ன பிர யோசனம் ராமன எதிர் நினனைக காட்டி அடி தாழவென - உன்னை எடுத்துககொணடுபோய ராமன் முனனிலையில வைதது நமஸகரிப்பேன இது காண்டி-இது உறுதி என்று கொளவாயாக இது காலம-மேலும் இது தான தருணம் - ராமனிடம உனனைக கொணடு சேர்கக.

குறிபபு · அனுமன சீதாபிராட்டியை எங்கே காணப் போகிறோம் என்று எணணினுன, காணவே முடியாது என்றுகூட எணணினுன.

அநத நிலையில அவளைக் கணடு கொண்டான். உளளம் இப்படியும் அப்படியுமாக எபபடி யெலலாமோ பாயகிறது. தனியாய இருககிருளே என்று கவலை. அவளுக்குக் கேடு நோந்துவிடக் கூடாதே என்று பயம் இத்தனை உணாசசி களும் செயயுளில பாவமாக உரு எடுக்கின்றன.

அனுமனது உளளததின பட படபபை ஓசைகளும் தாளஙகளும் வெளியாககுகின்றன.

## காணவில்லை என்று சொல்ல?

3. சீதையை நோக்கி மேலும் சொல்லுகிறான் அனுமன். 'நீயோ மென்மையான பூங்கொடி போன்றவள். ஆனால் என்னுடைய தோளின்மேல் சௌகரியமாக இருக்கலாம். துயர் நீங்கினவளாய் உறங்கியும் விடுவாய்.'

'பொனதி ணிபொ லஙகொ டி!என
மெனம யிர்பொ ருந் தித்

துனறி யபு யத்(து)இ னி(து)
இருகக துயா விட டாய்,

இனது யில்வி ளைக்க,—ஓா
இமைபபின இறை வை கும

குனறி டையு னைககொ டு
குதிபபென இடை கொள ளேன.' (72)

3. பொனதிணி பொலங்கொடி - பொன மயமான அழகிய பூஙகொடிபோனறவளே. என மெனமயிர் பொருநதித் துனறிய புயத்து - மெனமையான ரோமம் அடாநது அமைநதுளள என தோளின மேல இனிது இருக்க - சௌகரியமாக நீ தங்கி யிருகக துயா விட்டாய இன்துயில விளைக்க - துயர் நீஙகினவளாய சௌகரியமாகத தூஙக ஓா இமைபபின - ஒரு இமைப பொழுதில இறை வைகும குனறிடை உனைக்கொடு குதிபபென - ராமன தஙகும் குனறிலேயே உனனைச சுமநதுகொணடவனாய் போயக் குதிபபேன இடை கொளளேன - நடுவே தங்குவது எனபது கிடையாது.

குறிபபு மனுஷாகள் வாகனமாக இருநது மககளை முதுகிலத் தூக்கிச செலவது பூாவ காலததில சாமானய வழக்கமாக இருநதது இப்போதும் ஹிமாலயப பிராநதியங் களில அது வழக்கததில இருககிறது

அனுமன சீதையைத் தோளில வைத்துத தூக்கிக கொணடு, போவேன என்று சொலலுவது வெறறுரை

4. 'நான உனனைத தூக்கிக்கொணடு போகி றேன் எனபது தெரிந்து, அரக்காகள் தொடாகிறது என்று ஏற்பட்டால் அவாகளை அப்படியே ஹதம் செயது விடுவேன் அவர்கள் மேல் ஏற்படுகிற என் கோபத்தை யெல்லாம் தீாதது்க் கொளளுவேன'

'அறிந(து)இ டைஅ ரக்கா தொடா
வாாகள உள ரா மேல,

முறிந(து)உ திர நூறி, வளா
எனசி னமமு டிப பேன

நெறிநத குழல! நினநி லைமை
கணடு நெடி யோன பால

வெறுங்கை பெய ரேன,ஒ ருவ
ராலும விளி யா தேல' (73)

யலல, விளனியாசமலல 'அப்படியே ஒரு தாவில் குதித்து விடுவேன, இடையிலத தங்கமாட்டேன' என்று சொல்லுவ தெலலாம உறுதியையும ஆத்திரததையும் காட்டும் வழக்குததான.

4. முறிந்து உதிர நூறி - அவாகள எலலாரையும் நொறுபட்டுச சிதறுணடு போகும்படியாகத தாககி. வளா என சினம் முடிபபேன - என நெஞசில மேலும மேலும் வளாநதுகொணடிருக்கிற கோபததைத தீர்பபேன்—அவா களைக கொலலுவேன. நெறிநத குழல - நெளிநது சுருணட கூநதலையுடைய தாயே. நின நிலைமை கண்டு - இநத உன அபாயமான நிலைமையைக கணடு விட்டு. நெடியோனபால வெறுங்கை பெயரேன - ராமனபால வெறுங் கையோடு எப்படிப போவேன ஒருவராலும் விளியாதேன - யாராலும் சேதம் ஏறபடாது எனககு.

5. சீதையை எடுத்துக்கொண்டு செல்லாமல் ராமனிடம் போனால் என்ன சொல்லுகிறது என்ற திகைப்பு வருகிறது அனுமனுக்கு.

'அருந்ததி யுரைத்தி,— அழ
கற்(கு)அ ருகு சென்(று)''உன்
மருந்த னைய தேவி! நெடு
வஞ்சர் சிறை வைப்பில்,
பெருந்து யரி னோடும், ஒரு
வீடு பெறல் இல் லா(து)
இருந்த னள்''என் பப கரின்
என்அ டிமை என் னும்?' (74)

6. 'ராமனிடத்தில் என்னத்தைச் சொல்ல அரக்கர்களோடு போர் செய்தால் புண்ணுக்கு மேல் புண்ணாக என் தோள்களுக்கு ஏற்படும்.

5 அருந்ததி உரைத்தி - அருந்ததியை யொத்த அன்னையே சொல். அழகற்கு அருகு சென்று - ராமனிடம் போய். உன் மருந்து அனைய தேவி - தேவாமிர்தத்தை யொத்த உன் சீதை. நெடு வஞ்சர் சிறைவைப்பில் - வஞ்சிக்கிற தொழிலில் மிகத் திறம் படைத்த அரக்கர்களின் சிறையில் வைக்கப்பட்டவளாய். ஒரு வீடு பெறல் இல்லாது - ஒருவகையான விடுதலையும் பெறுவது என்பது இல்லாது இருந்தனள் என்ப பகரின் - இருக்கிறாள் என்று சொன்னால். என் அடிமை என்னும் - நான் தொண்டு செய்கிறேன் என்பதில் பொருள் உண்டா?

அத்தகைய புண்களுக்கு உள்ளாகாத தோள்களோடு நான் சௌகரியமாய்ப் போயப் பகைவர்களுடைய பலத்தைபபற்றி ராமனிடம் பிரசஙகம் செயயவா? சீதையைக் கொண்டுவர வில்லை. ஆனால் என் உயிரை நன்றாகக் காப்பாற்றிக் கொண்டேன் என்று சொல்லவா?' என்றான் அனுமன.

'புணதொ டா(வு)அ கறறி ய
புயத்தி னொடு புக கேன
விணட வாவ லத்தை யுமவி—
ரித து ரைசெய கே னோ!
கொணடு வரு கிறறி லென,
உயிர்ககு றுதி கொண டேன,
கணடு வரு கிறறி லென'
எனககு றுறு கே னோ' (75)

6 விண்டவர் வலத்தையும் – நமமோடு ஒட்டாதவரான அரககாகளது திறததை கொணடு வருகிறறிலென – சீதையை நான கொணடு வரவிலலை. உயிர்ககுறுதி கொண டேன – அலலது எனனுடைய உயிரை நனறாயக காபபாறறிக் கொணடேன. கணடு வருகிறறிலென எனக் கூறுகேனோ–அலலது, சீதையைக காணவே இலலை என று தான சொலலுவேனோ?

குறிபபு ஒரு வீரனுக்கு வாயவிட்டுச சொலல முடியாத விஷயஙகளை வெகு அழகாய எடுததுச சொலலி யிருககிறது. 'காணவே இலலை என று சொலவது எவவளவு அடாத காரியம. அதைச சொலலுமபடியாகவா செயகிறாய என்னை?' எனறு அனுமனாகிய மகா வீரன சொலலு கிறான. அபூாவமான பாவம் இது

## வீரத்தைக் காக்கச் சொல்!

7. சீதைக்கு நேரக்கூடிய ஆபததை உணர்ந்த மாத்திரததில் அனுமனது அனபும் ஆத்திரமும் சேர்ந்து அவனைத் துரிதபபடுத்துகின்றன.

'வேறே நான என்ன சொல்ல இருக்கிறது, ஒன்றுமில்லை! ராமனிடத்தில் உன்னைக் கொண்டு போய்ச சேர்க்கும்படி விதியே எனக்கு உதவி செய்கிறது! நீ அதற்கு அருள் செய்ய வேண்டும்'.

'வேறி னிவி ளமப வுள(து)
இன்று, விதி யால இப

பேறு பெறும் என்கண அருள
தந்த ருளு, பின போய

ஆறு துயர், அம்சொல் இள
வஞ்சி! அடி யன தோள்

ஏறு கடி (து)' என்று தொழு(து),
இன்ன டிப ணிந் தான. (76)

7. வேறினி விளமப உளது இன்று - வேறு சொலலுவதற்கு ஒன்று மிலலை. விதியால இப பேறு பெறும் எனகண - நலல விதியின உதவியால உன்னை ராமனிடம் சேர்ககும பாககியத்தைப் பெற இருக்கும் என்னிடம அருள தநதருளு - கிருபை செய்து அருள வேணடும் பின போய் ஆறுதுயா - இஙகுள்ள கஷ்டததை யெலலாம் ராமனிடம் போன பினபு தீர்த்துக் கொள்ளலாமே. அம்சொல இள வஞ்சி - இனிய சொல வழங்கும் மென்மையான பூங கொடியே. அடியன தோள ஏறு கடிது என்று - எளியேனுடைய தோளமேல உடனேயே ஏறி அருள வேணடும என்று சொலலி. தொழுது இன்னடி பணிந்தான - இரணடு கைகளையும் கூப்பினவனுயச் சீதையின அழகிய காலில விழுநதான.

8 'அரக்கர்களிடை சீதை இருக்கிறுளே, பேரா பதத்துக் கெல்லாம் உள்ளாவாளே, உயிருக்கே ஆபத்து வந்துவிடுமே!'' என்றெல்லாம் பயபபடு கிருன் அனுமன். ஆனல் சீதைக்கு அந்த பயம் ஒனறுமில்லை அவளுக்குத் தான் இருக்கும் இடம் ராமனுக்குத் தெரியாதே, தன்னை எப்படி மீட்க முடியும்? ராவணனே மற்ற அரக்காகளோ தன்னை ஒன்றுஞ் செயய மாட்டார்கள, தன்னைக் கணடால் அவர்கள் அஞ்சததான செயகிறுாகள் எனற உறுதியில் இருக்கிறுள.

மேலும் தனியான ஆசை ஒனறு அவளது மனசில் துடித்துக் கொணடிருக்கிறது. தன நாயகன உலகததிலேயே சிறந்த வீரன. அவன் தன்னை அபாரமாக மதிததிருக்கிறுன். இந்த உணமை உலகததுக்குத தெரிய வேண்டும் எப்படித தெரியும்? இலங்கைக்கு வந்து அரக்காகளை யெல்லாம் போரில் கொனறு வெற்றியை நாட்டித தனனை மீட்க வேணடும். அபபோதுதானே தெரியும் எனறு எண்ணியவளாய அனுமனிடம் விஷயததைச் சொல்லுகிறுள்.

அனுமனும் விஷயததை அறிந்து கொணடான், விடை பெறத தயாராகவே இருக்கிறுன.

'தாயே, நீ சொல்லுகிறபடியே செயகிறேன். ராமபிரானிடம் போயத தெரிவிக்க வேண்டியதைச் சொல்லியருள வேணடும்,' எனகிறுன.

சீதையும் சொல்லுகிறுள்

'இன்னும் ஒரு மாசம்தான் உயிரை வைத்துக் கொண்டிருப்பேன. உன்னிடம் நான சொல்லுகிற உறுதியான வார்த்தை இது.'

'இனனும் ஈண்டொரு
திஙகளிருபபலயான;
நினனை நோக்கிபப
காகினறேன; நீதியோய,
பினனை ஆவி
பிடிககினறிலேன, அந்த
மனனன ஆணை
இதனைம னக்கொள நீ!'       (77)

9. ராமன வந்து தனனை மீட்பான என்ற உறுதி மனசில் ஏற்பட்டதில்க் குறையில்லை. ஆனாலும் ஒரு சபலததினல்—பெண் தன்மைக் குணடான சபலததினல்—வேண்டாத சந்தேகங்கள் வந்து சீதையின மனசைக் குழபபுகினறன.

8 இனனும ஈண்டு ஒரு திஙகள இருபபல யான - இன்னும் இஙகே ஒரு மாசம உயிரை வைததுக்கொண டிருபபேன. பகர்கினறேன - உறுதியாகச சொலலு கிறேன. நீதியோய - வாழககை முறைமெயலலாம தெரிந தவன நீ. பினனை ஆவி பிடிககினறிலேன - அநத ஒரு மாசம் கழிநத பிறகு உயிரை வைததுக கொணடிருககமாட்டேன. அநத மன்னன் ஆணை இதனை மனக்கொள நீ - இதை லேசான காரியமாக எணணக கூடாது, அநத ராமனது ஆணை என்றே கருத வேணடும நீ

'ராமனுக்குத் தகுந்த மனையாள் அல்ல நான். ஆனாலும் என்னிடத்தில், பெண்பாலானது பற்றி, இரக்கங் கொள்ள வேண்டும். அந்த இரக்கம் ஒரு வேளை இல்லாமற் போய்விடுமோ?'

'ஆரம தாழதிரு
　　மாாபற(கு)அ மைந்ததோர்

தாரம தானஅலள்
　　ஏனும, தயாவெனும

ஈரந்தான அகத(து)
　　இலலைஎன் ருலும,தன

வீரம காததலை
　　வேணடென்று வேண்டுவாய'
(78)

9. ஆரம் தாழ திருமார்பற்கு - மாலைகள் அணிந்து விளஙகும் மாாபனான ராமனுக்கு. அமைநததோா தாரம தான அலள ஏனும் - தகுதியான மனையாள் நான அலல எனபது உணமையானாலும். தயாவெனும ஈரநதான அகத்து இலலை என்றாலும் - கருணை எனகிற இரக்கம் மனசில இலலாமற போனாலும போகட்டும்—ஆனால. தன் வீரம காததலை வேண்டு என்று வேண்டுவாய - தனக்குரிய வீரததைக் காகக வேணடும் அலலவா, அதை விரும்பிக கைக்கொளளுவாயாக என்று ராமனை நீ பிரார்ததிபபாயாக.

குறிப்பு சந்தோஷம், சநதேகம், பயம் எலலாம் கலநது மனசைக் கலக்குகிற நிலையிலிருநது உணடாகிற உணமையான வார்ததைகள தான்!

## சிந்தையாலும் தொடாச் செவ்வரம்

10. சீதை அனுமனிடம் சொல்கிறாள் 'என்னைச் சரியாய்ப் பாதுகாக்க வேண்டும் என்று லக்ஷ்மணனிடம் கட்டளை யிட்டிருந்தான அல்லவா ராமன். ஆகவே என்னைக் காக்கவேண்டியவன் லக்ஷ்மணன் தானே.'

'ஏத்தும் வென்றி
  இளையவற்(கு) ஈதொரு
வார்த்தை கூறுதி
  மனஅரு ளால்எனைக்
காத்தி ருந்தவற்
  கேகடன், இன்றிடை
கோத்த வெஞ்சிறை
  வி(டு)என்று கூறுவாய்.' (79)

10. ஏததும வென்றி இளையவற்கு – யாருமே புகழும் வெற்றிகளுக்கு உரியவனான தம்பி லக்ஷ்மணனுககு ஈதொரு வார்த்தை கூறுதி – இநத ஒரு வார்தத்தையை நீ சொலல வேணடும். மன அருளால எனனைக் காத்திருநதவற்கே கடன் – ராமனது கட்டளையினால என்னைக் காத்திருநதவனுக்குத் தானே கடமை இனறு இடை கோதத வெஞ்சிறை விடு – இப்போது இடையில வந்த இநதக் கொடிய சிறையிலிருந்து என்னை விடுவிப்பது—கடமை எனறு சொலலுவாயாக.

11. லக்ஷ்மணன் ஞாபகம் வந்தது. அவனுக்குச் சொல்ல வேண்டிய வார்த்தையைச் சொல்லி விட்டாள். அடுத்தாற்போல் ராமனது ஞாபகம் வரு கிறது இந்த இடத்தில் மனசுக்குள் ஒரு ஏமாற்றமும் சோர்வும் புகுந்து விடுகின்றன. ஒரு மாசத்துக்கு மேல் உயிரைத் தாங்கிக்கொண்டிருக்க முடியாது என்று சொல்லுகிறாள்.

'திங்கள் ஒன்றின் என்
செய்தவம் தீர்ந்ததால்,

இங்கு வந்தில
னேஎனில், யாணர்நீர்க்

கங்கை ஆற்றங்
கரைஅடி யேற்குத்தன்

செங்கை யால்க்கடன்
செய்கென்று செப்புவாய்!' (80)

11 திங்கள் ஒன்றின் என செய்தவம் தீர்ந்ததால் — ஒரு மாசத்தில் உயிரைக் காப்பாற்றிக் கொண்டிருக்க வேண்டிய என் நோன்பு தீர்ந்துவிடும் இங்கு வந்திலனே எனில் — அதற்குள் இங்கு ராமன் வராமலப் போனால். யாணர் நீர்க் கங்கை ஆற்றங் கரை — புது வெள்ளம் புரண்டு வரும் கங்கை ஆற்றங்கரையில் அடியேற்கு — எனக்கு தன் செங்கையாலக் கடன் செய்க என்று செப்புவாய — தன்னுடைய அழகான கைகளினாலேயே எனக்குச் செய்ய வேண்டிய அபரக் கிரியை களைச் செய்து தீர்க்கும்படிச் சொல்லுவாயாக.

12. மாமியாாகளைப பற்றி ஞாபகம் வரவும் அவாகளுக்குச் சொல்லவேண்டிய வார்ததைகளையும் சொல்லிவிடுகிருள.

'சிறககும மாமியா
மூவாக்கும, சீதையாண(டு)
இறககினருள், தொழு
தாள, எனனும இனனசொல்
அறத்தின நாயகன
ஆா அருள இனமையால்
மறக்கு மாயினும,
நீமற வேல்லுயா!' (81)

12. சிறக்கும மாமியா மூவர்க்கும் - ராமனது அன்புக்குப் பாத்திரமான கோசலை, சுமிததிரை, கைகேசி ஆகிய மூன்று மாமியார்களுககும். சீதை யாணடு இறக்கினருள தொழுதாள- சீதையானவள இலங்கையில இறக்கின்ற தறுவாயில உங்கள மூவர்ககும் வணக்கம் செய்தாள் எனனும் இனன சொல-எனறு இநதச சொலலை அறத்தின நாயகன - ராமன ஆா அருள இனமையால - எனனிடததில நிலையான கருணை இலலாது போகும ஆதலால மறக்குமாயினும்-மறநதுவிட நேர்நதாலும நீ மறவேல - நீ மறநது விடாதே.

குறிப்பு எப்படியோ வேணடாதபடி ராமன வந்து மீட்க மாட்டான, தான எப்படியும் உயிர் துறகக வேணடியது தான எனற எணணம் சீதையின் உள்ளததிலப் புகுநது விட்டது அநத தததளித்த நிலைமையில ராமன தன்னைக் கவனிகக மாட்டான என்றுகூட எணணுகிறது அவள் மனசு.

13. 'நான் சாமானயப் பெணதானே, எந்தப் பெண்ணுக்குங் கிடைக்காத தெயவப பிறவியாகிய ராமன் எங்கோ இருந்து வந்து என்னைப பாணிக்கிர கணம் செயதான் அல்லவா!' என்ற அதிசயம் மன சுக்கு வருகிறது

'வந்தெனைககரம
பறறிய வைகலவாய,

''இநத இபபிற
விக்கிரு மாதரை

சிநதை யாலும
தொடேன,'' எனற செவ்வரம

தநத வார்த்தை
திருச்செவி சாறறுவாய.' (82)

13 வநதெனைக கரம பறறிய வைகலவாய — அயோததியி லிருநதே வநது எனனை மணநத சநதாபபததில செவவரம்— உணமையான வரமாக

குறிபபு ராமனுடைய தூய உளளம ஏக பதனி விரததடு ஒட்டி யிருந்தது அநத மனப்பாஙகை அறிநதவளான சீதை, வேறொரு பெணணை ராமனது சிநதை கூடக் கருதாது எனற உறுதியில இருநதாள. அதனாலேயே உடலை விட்டுவிட்டு, 'சிநதையாலும் தொடேன' எனற வார்தமதை வருகிறது

## என்னை நோக்கி வரவா செய்வான்!

14. மனித உள்ளமானது ஒரு நிலையிலிருப்ப தில்லை. நேற்று, நன்றாய் உவந்ததாய் இருந்த காரியம், இன்று ஒரே வெறுப்பாய்ப் போய் விடுகிறது.

சாமானிய உள்ளம் இப்படியிருக்கிறதென்றால் சீதையின் உள்ளத்தைப்பற்றிச் சொல்லுவானேன்:

சீதையின நொந்த உள்ளத்தில் என்ன என்ன எண்ணம் எல்லாமோ உண்டாகிறது. நம்பிக்கைக் குள் நம்பிக்கை யின்மையும் உதிக்கிறது!

உயிர்துறக்கவே நேரும் என்ற எண்ணம் வருகிறது. என்ன செயவாள் அவள்?

'ஈண்டு நான இருந்(து)
இன னுயிர மாயினும

மீண்டு வநது
பிறநதுதன மேனியைத்

தீணட லாவதோர
தீவினை தீரவரம

வேணடி னாளதொழு(து)
என றுவி ளமபுவாய்'. (83)

---

14. ஈண்டு நான இருநது இனனுயிர மாயினும — மீட்கப் படாமல இஙகேயே நான் இருகக நேரும், அது காரண மாக உயிரை மாயததுக் கொளளவே நேரும அபபடி இறநதுபோன பிறகு. மீண்டு வநது பிறந்து - மறுபடியும் இநத உலகில வநது பிறநது. தன மேனியைத தீணடல ஆவதோர் — ராமனது மேனியை அணையும்படியான. (அரிய) தீவினை தீர்வரம் — பாவங்களை எலலாம் போக்கும்படியான வரததை. வேண்டினாள தொழுது — தொழுதவணணமாயப் பிரார்த்தித்தாள். என்று விளம்புவாய — எனபதாக ராம னிடம் விணணப்பிப்பாய.

15. சீதைக்கு ஒரே ஒரு தணியாத ஆசை. ராமன் அயோத்திக்குப் போவான். ஒரே கோலாகலமாய் வரவேற்பு முதலியவைகள் நடக்கும். அதைக் கண்குளிரப் பார்க்கவேண்டும் என்பதுதான். அந்த எண்ணம் அவளது உள்ளத்தில் இடை இடையே வந்து துடிக்கும்.

'அரசு வீற்றிருந்(து)
ஆளவும், ஆயமணிப்

புரசை யானையின்
வீதியிற் போகவும்,

விரசு கோலங்கள்
காண விதியிலேன்

உரைசெய(து) என்னைகொல்,
ஊழ்வினை உள்உளேன் (84)

15. அரசு வீற்றிருந்து – அரச தோரணைக்குரிய சிம்மாசனத்தில் வீற்றிருந்து ஆளவும் – அரசியல் நிர்வாகம் செய்து. ஆயமணி புரசையானையின் – அரிய ரத்தின வடங்களைக் கழுத்தில் அணிந்த யானையின்மீது இருந்துகொண்டு வீதியிற் போகவும் – ஊர்வலம் போகிற அழகையும். விரசு கோலங்கள் – இவைகளோடு ஒட்டிய அலங்காரங்களை எல்லாம். காண விதியிலேன் – கண்டு அனுபவிக்கும்படியான பாக்கியம் இல்லாதவள் நான். உரைசெய்து என்னை கொல் ஊழ்வினை உள்உளேன் – ஊழ்வினையின் கொடுமைகளுக்குள் அகப்பட்டவளாகிய நான் என்னத்தைப் பேசி என்ன செய்ய?

குறிப்பு: ஆடவர்களுக்குரிய அரச தோரணைகள், ஊர்வலங்கள் முதலியவற்றில் 'பெண்பாலருக்கு மிக்க ஈடுபாடு என்பதை இன்றும் காண்கிறோம்

16 அனுமனோடு இவ்வாறெல்லாம் இதயம் நைந்தவளாய்ப் பேசுகிறாள் சீதை, பேசப் பேச ராமன் வரமாட்டான் மீட்கமாட்டான் என்ற எண்ணம் மேலிடுகிறது. அந்த மேலீட்டினால் ஒரே சோர்வுக்கு மனம் உள்ளாகிறது அந்தச் சோர் வானது வேறு காரணம் கற்பிக்கிறது

'தன்னை நோக்கி
உலகம்த ளர்ந்தறகும

அன்னை நோயக்கும
பரதன்அங்(கு) ஆற்றும

16. தன்னை நோக்கி உலகம தளர்தற்கும் - ராமன வர வில்லையே வரவில்லையே என்று அயோத்தியிலுள்ளவர்கள் எல்லாரும ஏங்கிச சோர்கிறார்கள இது ராமனுக்குத தெரியும். அன்னை நோய்க்கும் - கோசலை வருந்துகிறாள என்று சொல்லுகிறது! தாஙகமுடியாத ஒரு நோயககு உள்ளாகியிருக்கிறாள என்றுதானே ராமன எண்ண வேண்டும இதற்குமேல—பரதன அங்கு ஆற்றும் இன்னல நோயக்கும்-பரதன் பெருந துன்பமாகிய நோயைச் சகித்துக் கொண்டிருககிறான், தனககாகததான் ராமன் அறியாத காரியமா இது? இவவளவையும் எண்ணினால அயோத்தி

இன்னல் நோய்க்கும்அங்(கு)
ஏகுவது அன்றியே
என்னை நோக்கிஇங்(கு)
எங்ஙனம் எய்துமோ?' (85)

யைப் பார்த்துப போவானே ஒழிய, ஒன்றுககும் உதவாத என்னைப் பொருட்படுதறி இஙகே எபபடி வருவான்?

குறிபபு கவியில் எளிமை என்றால், எளிய முறையில் அபூர்வமான உணர்சசியைப் பிறக்கச் செயவதுதான், எளிமை என்கிற உத்தியைக் காண வேணடுமானால் கம்பரிடம் போக வேணடும்.

செய்யுளைப் பாடப பாட எளிமை விளங்கும். அதோடு உளளக் கனிவும் புலனாகும். எளிமை, உணர்ச்சி, பாவம் எல்லாம் கலந்த கவி உருவத்துக்கு மேலே கணட செய்யுள் ஒரு அரிய எடுத்துக்காட்டு

## ராமபாணந்தான் ஊழித் தீ!

17. சீதையின் இதயத்துக்குள் எப்படியோ ஒரு ஏமாற்றம் புகுந்தது. 'என் உயிர் இங்கேயே போய்விடும். என்னை ஒருவரும் மீட்க மாட்டார்கள். அபரக்கிரியைகளைக் கங்கைக் கரையில் செய்துவிடச் சொல்' என்றெல்லாம் புலம்புகிருள். அனுமனுக்கு ஒன்றும் ஓடவில்லை.

'எவ்வளவோ உறுதி சொல்லியும் கணையாழியைக் காட்டியுங் கூட சீதைக்கு உறுதி பயக்கவில்லையே! உயிர் பதைப்பது நிற்கவில்லையே' என்று கையை நெரித்த வண்ணமாய் நிற்கிருன் அனுமன். சிறிது நேரம் கழித்து அவனது உள்ளத்தில் ஒரு ஊக்கம் பிறக்கிறது.

சந்தம்

தானன தானன
தான தனன்ன

இந்திறம இன்னயன
விளம்ப, 'இன் உயிர்

தத்துறல ஒழிந்திலள
தையலாள்' என,

17. இந்திறம இன்னயன விளம்ப – இந்த விதமாக இன்ன இன்ன விஷயங்களைச் சீதை சொல்லவும். ஒழிந்திலள் தையலாள்—பதை பதைக்கிற உயிருக்கு அமைதி வரவில்லையே சீதைக்கு. என - என்று எண்ணியவனுய.

பொய்த்தோர் வில்லிகள்
போவா ராம்,
இத்தோ(டு) ஒப்பது
யாதுண் டே' (88)

20 'உத்தமியாகிய உன்னை இப்படியெல்லாம் கஷ்டப்படுத்திய அரக்கர்களைக் கொல்லாமல், வானர வீரர்களாகிய நாங்களும் உயிரைப் பந்தோபஸ்தாக வைத்துக்கொண்டு அயோத்திக்குப் போக வேண்டாமா?'

'நல்லோய் நின்னை
நலிந்தோ ரைக்
கொல்லேம் எம்உயிர்
கொண் டங் கே
எல்லோ ரும்செல,
எங் கோ னும்
வில்லோ டும்செல
வேண் டா வோ' (89)

19 பொய்த்தோர் வில்லிகள் போவாராம் - உன்னைக் காக்கும் விரதம் கொண்டவர்களாகிய ராம லக்ஷ்மணர்கள் விரதத்தை மறந்தவர்களாய் வெறுமனே போய் விடுவார்களாம் இத்தோடு ஒப்பது யாதுண்டே - இதுபோல நம்பத் தகாத காரியம் வேறில்லை!

20 நல்லோய் நின்னை நலிந்தோரை - உத்தமியாகிய உன்னை இப்படியெல்லாம் வதைக்கிற அரக்கர்களை கொல்லேம் எம் உயிர் கொண்டங்கே எல்லோரும் செல - நாங்களும் கொல்லாதபடி அயோத்திக்கு எல்லாருமாகப் போக. எங்கோனும் வில்லோடும் செல வேண்டாவோ - கோதண்ட ராமனும் அந்த வில்லோடு அந்த அயோத்திக்குள் போக வேண்டாமா? இதைவிட வெட்கக்கேடு என்ன இருக்கிறது?

21. சீதை சிறையிலேயே இருந்து விடுகிற காரியம், ராமன் வந்து மீட்காத காரியம் இரண்டும் ஒருவிதமான சிரிப்பை உண்டாக்கியது அனுமனுக்கு. பேசப் பேச அந்த மன நிலை மெள்ளமாறி ஆங்காரம் ஆகிவிடுகிறது 'ஏழு சமுத்திரங்களும் பதினாலு உலகங்களும் என்ன பாடு படப்போகிறது பார்' என்று ஆங்காரத்தோடு வார்த்தை வருகிறது.

'தாழ்ந்த தண்கடல்
தம்மோடும்
ஏழ்க(கு) ஏழுல
கெல்லாம், மன்
ஆழிக் கையவன்
அம்பு அம்மா
ஊழித் தீயென
உண்ணுதோ (90)

21. தாழ்ந்த தண் கடல் தம்மோடும்-குடாவாய் அமைந்துள்ள ஏழு சமுத்திரங்களோடு ஏழுக்கு ஏழ உலகெல்லாம்-பதினாலு உலகங்களும் மன் – ஒரே படியாக மிச்சம் இல்லாமல் ஆழிக் கையவன் அம்பு-தோள் வளையத்துக் கான கையோடு கூடிய ராமனுடைய கொடிய அம்பு. அம்மா-அட்டா. ஊழித் தீயென உண்ணுதோ-அட்டா சர்வ சம்ஹார காலத்தில் வரும் தீயைப்போல சாம்பலாக்கி விடாதா?—கடல்களையும் உலகத்தையும்.

குறிப்பு: அனுமனது உள்ளம் இன்னும் என்ன என்ன உணர்ச்சிகளெல்லாம் உள்ளாகிறது என்பதை மேலும் பார்ப்போம்.

## இராவணன் எவன் தெரியுமா?

22. சீதா பிராட்டியிடம் அனுமன் மேலும் சொல்லுகிறான்

'எதிர்காலத்தில் நடக்கும் யுத்தம் கண்ணுக்குத் தெரிகிறது. அரக்கர்களது உடம்பு வெட்டுப் படுகின்றன. இரத்தம் பெருகிப் பெரிய பெரிய மடுக்களாக நிறைகின்றன.'

'புளிக்கும் கண்டகர்
புண்ணீருள்
குளிக்கும் பேய்த்தடை
யுந்தோறும்-
ஒளிக்கும் தேவர்
உவந்துள்ளம்
களிக்கும் நல்வினை
காண்டியோ' (91)

22. புளிக்கும் கண்டகர் புண்ணீருள் - அருவருப்பான அரக்கரது இரத்த மடுக்களில். குளிக்கும் பேய்த்தடையுந் தோறும் - நின்று குளிக்கும் பேய்கள் நீந்தும்போதெல்லாம். ஒளிக்கும் தேவர் - அரக்கர்களுக்காகப் பயந்து ஒளிந்து கொண்டிருக்கிற தேவர்கள். உவந்து உள்ளம் களிக்கும் - மனம் உவந்து உள்ளத்தில் ஆனந்தம் பெருகுவதற்குக் காரணமான நல்வினை காண்டியோ - தர்மமான வீரச் செயலைக் காணப் போகிறாய் அல்லவா.

23. சீதையினுடைய மனசில் உண்டான சந்தேகத்தை நிவர்த்தி செய்யும்படியான முறையில் பேசுகிறான் அனுமான். சீதைக்கு உறுதி உண்டாகாமல் இருக்க முடியாது பேச்சைக் கேட்டபிறகு.

அதன்மேல் சீதையிடம் ஒரு மாசம் காத்துக் கொண்டிருக்க வேண்டியதில்லை என்று சொல்லுகிறான்

'ஈண்டொரு திங்கள் இவ்
இடரின் வைகுதல்

வேண்டுவ(து) அன்று, நான்
விரைவின் வீரனைக்

காண்டலே குறைவு, பின்
காலம் வேண்டுமோ,

ஆண்டகை இனியொரு
பொழுதும் ஆற்றுமோ.' (92)

23 ஈண்டொரு திங்கள் இவ்விடரின் வைகுதல் வேண்டுவது அன்று – இந்த இடத்தில் ஒரு மாசம் கூடத் துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருப்பது அவசியமில்லை. நான் விரைவின் வீரனைக் காண்டலே குறை – நான் இப்படியே போய் ராமனைச் சந்திக்க வேண்டியதுதான் பாக்கி. பின் காலம் வேண்டுமோ – அதற்குப்பிறகு அவன் இங்கே வருவதற்கு நாள் நக்ஷத்திரம் என்று ஒத்திப் போடுகிறது உண்டா? ஆண்டகை இனியொரு பொழுதும் ஆற்றுமோ – வீரனாகிய ராமன் ஒரு வினாடி தாமசிப்பானா?—ஒரு வினாடி தாமதத்தைச் சகிப்பானா?

24. 'ஒரு மாதத்திற்குள் வந்து உன்னை மீட்க வில்லை என்று வைத்துக்கொள்ளுவோம். அதனால் என்ன ஏற்படும் தெரியுமா?'

'சூராவரும் குழலி! அக்
குறித்த நாளினே,

விராவரும் நெடுஞ்சிறை
மீட்கி லான்எனில்,

பராவரும் பழியொடும்
பாவம் பற்றுற(க்)

இராவணன் அவன், இவன்
இராமன்' என்றனன். (93)

24 சூராவரும் குழலி - சூரவ மலர் வைத்துப் பார்க்க வேண்டிய அத்தனை அழகு வாய்ந்த கூந்தலையுடையவளே அக் குறித்த நாளினே - நீ குறித்த அந்தக் கெடுவுக்குள் விராவரும் நெடுஞ்சிறை - எங்கே போனாலும் சிறைதான் என்று சொல்லக்கூடிய இந்த நிலையை விட்டு மீட்கிலான் எனில் - உன்னை மீட்காமல் இருந்தால் பராவரும் பழியொடும் - உலகம் எங்குமே சொல்லும் பழியோடு. பராவரும் - பரவி வரும் பாவம் பற்றுதற்கு இராவணன் அவன் - பாவத்துக்கு உள்ளாவதற்கான இராவணன் அங்கே இருக்கிற ராமன். பிறகு என்ன? இவன் இராமன்- இங்கே இருக்கிற பாதகன் ராவணனே ராமன் என்றுகூடச் சொல்லிவிடலாம்

குறிப்பு மீட்காமல் இருப்பதைவிட 'கேவலமான காரியம் உலகத்திலேயே இல்லை' என்ற பாவம் செய்யுளில் அபூர்வமாயக் கிடக்கிறது.

## ராமனை நோக்கித் திரும்பி விட்டான்!

25. அனுமனுடைய பேச்சு முடிந்து விட்டது. விடை பெற்றுப் போகவேண்டியதுதான். அப்போது தான் தலையில் சூடியுள்ளதான சூடாமணியை எடுத்து அனுமனிடம் காட்டிச் சொல்லுகிறாள் சீதை

'சூடை யினமணி
கண்மணி ஒப்பது,
தொல் நாள்

ஆடை யினகண
இருந்தது, பேரடை
யாளம், —

நாடி வநதெனை(து)
இனனுயிா நல்கிய
நம்பா!

25 சூடையின மணி — சூடாமணி யானது. கண்மணி ஒபபது — இந்தச் சூடாமணி கண மணிக்குச் சமானம் என்று சொலலக் கூடியபடி அவவளவு சிறந்தது. தொலநாள ஆடையின் கண் இருந்தது — அயோத்தியை விட்டுப் புறபபடும் போது எப்படியோ என்னுடைய ஆடையில் முடிநது கிடக்க நேர்நதது. பேர் அடையாளம் — உலகத்திலேயே இது போல வேறொன்று இல்லாததினால் என்னைக குறிபபிடு வதறகு நல்ல அடையாளம். நாடி வந்து என் இன்னுயிர் நல்கிய நம்பா — இவவளவு தூரம் தேடி வந்து என் அருமை யான உயிரைக் காப்பாற்றிக் கொடுத்த புணணியவானே.

கோடி' என்று
 கொடுத்தனள் மெய்ப்புகழ்
 கொண்டாள். (94)

26. சீதை மெள்ள ஜாக்கிரதையுடன் சூடா மணியைக் கொடுத்தாள். அனுமன் அதை என்ன செய்தான் என்று பார்க்கலாம்

தொழுது வாங்கினன்,
 தூசினிற் சுற்றினன்,
 சுற்றி,

பழுது உறு வகை
 பந்தனை செய்தனன்;
 பந்தித்(து)

25. கோடி என்று கொடுத்தனள் - வாங்கிக்கொள் என்று கொடுத்தாள். கோடி - கொள்வாய் மெய்ப்புகழ் கொண்டாள் - என்றென்றும் நிலை நிற்கும் புகழுக்குரிய சீதை.

குறிப்பு தான் இலங்கையில் இருப்பது உண்மையே இந்த விஷயம் ராமனுக்குத் தெரிந்து விடவேண்டுமே என்ற ஆத்திரமெல்லாம் சூடாமணியைக் கையில் எடுத்து மெள்ள, சாவகாசமாகக் கொடுக்கிற பாவத்தில் தெரிகிறது. மூன்றாவது அடி தனியாக நின்று சூடாமணிக்கும் அதைக் கொடுப்பதற்கும் இடையே நின்று ஜாக்கிரதையை உணர்த்துகிறது.

கோடி என்று எதுகையில் வைத்துக் கடைசி அடியைச் சொல்லும்போது ஜாக்கிரதையாகக் கொள்ள வேண்டும் என்பதை அழகாக எடுத்துச் சொல்லுகிறது

26. தொழுது வாங்கினன் - கையைத் தலைமேல் குவித்து விட்டு அதன் பிறகு மரியாதையாக ஏந்திய கையால் வாங்கினான். தூசினிற் சுற்றினன் - தன்னுடைய ஆடையின் முந்தியில் சுற்றினான். சுற்றிப் பழுதுறு வகை பந்தனை செய்தனன் - சுற்றிவிட்டு எந்த விதத்திலும் நழுவி விழாத

அழுது மும்மை
வலங்கொ(டு) இறைஞ்சினன,
அன போ(டு)

எழுது பாவையும
எத்தினள; எஙினன
இப் பால். (95)

படி இறுகக் கட்டினான். பந்தித்து அழுது மும்மை வலங் கொடு இறைஞ்சினவ — மேலே சொன்னபடி பந்தோபஸ்து செய்து விட்டுக் கண்ணீர் விட்டுக் கொண்டு சீதையை மூன்று தடவை பிரதக்ஷணம் செயது தரையில விழுநது நமஸகரித்தான. எழுது பாவையும் அனபோடு எத்தினள— அருமையாயச் செதுக்கிய பாவையை ஒதத சீதாபிராட்டியும் அனபோடு வாழ்ததினாள் அனுமனை எஙினன் இப்பால்-ராமன் இருந்த திசையை நோககியவனாயத் திரும்பினான் அனுமன்.

குறிபபு அருமையான அடையாளப பொருள் ராமனுக்குக காட்டுவதறகாகக் கிடைதது விட்டது. அதை பந்தோபஸது செயயும் ஜாக்கிரதை ஒரு பககம், சீதையை விட்டுப்போக வேண்டி யிருககிறதே என்ற கவலையினா லுள்ள தயக்கம் மறறொரு பக்கம்—இநத இரணடு பாவங் களும் செயயுளில் அறபுதமாக உருவெடுத் திருககினறன.

சீதையை இலங்கையில விட்டுவிட்டு ராமன் இருக்கும் இடத்தைப் போய்ப் பார்க்கலாம்.

# 7. பிணிவீட்டு படலம்

## அயோத்தி வந்தான்!

சீதையினிடம் விடை பெற்றுக்கொண்ட அனுமன் அசோகவனத்திலிருந்து நடந்து போனான். போகும் வழியில் ஒரு வளமான பூந்தோட்டம் இருந்தது. சீதா பிராட்டியை இந்த அரக்கர்களிடையே விட்டுப் போகிறோமே என்ற வருத்தம் ஒரு பக்கம், பகையாளிகள் மேல் எரிச்சல் ஒரு பக்கம்- ஆக இரண்டும் சேர்ந்து கோபத்தைக் கிளறிவிட்டது அனுமனது நெஞ்சில். பூந்தோட்டத்தை இப்படியும் அப்படியுமாக முறித்துச் சின்னாபின்னம் செய்து விட்டான்.

இந்த விஷயத்தைக் காவலாளர்கள் போய் ராவணனிடம் தெரிவித்தார்கள்.

'அப்படியா காரியம்' என்று சொல்லி, நல்ல திடகாத்திரரான அரக்கர்களைக் கூப்பிட்டுக் குரங்கைப் பிடித்துக்கொண்டு வரச் சொன்னான். அவர்களும் போனார்கள். அனுமனைப் பிடிப்பதற்காக நெருங்கினார்கள். அனுமன் தாக்கின தாக்கில் அவ்வளவு பேரும் மாண்டார்கள்.

இந்தச் செய்தியைக் கேட்டான் ராவணன். 'சரி, சரி, நீ போய்ப் பிடித்துவா' என்று சம்புமாலி என்ற வீரனை அனுப்பினான். அவனும் அனுமனால் மாண்டான். அதையும் வந்து சொன்னார்கள். ராவணனுக்கு அபாரமாய்க் கோபம் வந்து விட்டது. அவனே குரங்கைக் கொல்லுவதற்காகப் புறப்பட்டான்.

அப்போது படைத் தலைவர்களான ஐந்து சேனாதிபதிகள் வந்து, தாங்களே போய்ப் பிடித்து வருவதாகச் சொல்லிப் போனார்கள். அவர்களும் மாண்டார்கள்.

ராவணனுக்கு ஆங்காரம் தாங்கவில்லை, அவனே புறப்பட்டுவிட்டான். அந்த வேளை அவனுடைய மகன் அட்ச குமாரன வந்து குரங்கைக் கொல்லுவதற்கு ராவணேசுவரனாகிய நீ எப்படிப போகலாம் கூடவே கூடாது இந்திரனைப பிடிதது வரவேணடும் என்று அன்று எனககு எவ்வளவோ ஆத்திரம் நீயோ அணணனை ஏவி விட்டாய. என் வீரதறைக் காட்ட சநதாபபம் இலலாது போயவிட்டது. ஆகையால் இந்தக் குரஙகைப பிடிததுவர எனக்கு அனுமதி கொடு' என்று ரொம்பவும் வாதாடினான்.

ராவணனும் இசைந்தான் அட்ச குமாரனும் அனுமன் இருந்த இடம் சோநதான. வில்லை எடுத்து அம்பு தொடுக்கப பாாததான் அட்ச குமாரன். அனுமன அதற்குள் அவன் மேல்ப் பாய்ந்து வில்லை ஒடிதது விட்டான். இருவரும் ஒருவரை யொருவர் தாக்கினாகள். திடீரென்று அரக்கனைக் கீழே தள்ளி, அவன முதுகில் உட்கார்ந்து கொண்டான் அனுமன். அரக்கனால் அசைய முடியவில்லை. அவனைத் தரையில் அப்படியும் இப்படியுமாகத தேய்ததான். அட்ச குமாரனும் மாண்டான்

கடைசியாக இந்திரஜித்தே வந்தான. அனுமனுக்கு இதெல்லாம் வேடிக்கையாக இருந்தது. சரி, என்ன நடக்கிறது பார்ப்போம்' என்று நின்று

கொண்டிருந்தான். இந்திரஜித்து அனுமன் மேல் ஒரு பாசக்கயிற்றை வீசினான். அந்தக் கயிறு அனுமனை சுற்றிக்கொண்டது அப்படியே அனுமனைக் கயிற்றால் இறுகக் கட்டினான். கட்டிப் பிடித்துக் கொண்டுபோய ராவணன் முன்னிலையில் சேர்த்தான்.

அனுமனைப் பார்த்து 'நீ யார்?' என்று ராவணன் கேட்டான்

அனுமன சொல்லுகிறான்

'எங்கும் நிறைந்தவனாய உள்ள இறைவன் எப்படிப பட்டவன என்பது உனக்கும் தெரியும். எஙகும் நிறைந்துளள காரணததால் அவனுடைய உருவததில் முடியென்றும் நடு எனறும் அடி என்றும் கிடையாது அவன் அனாதியாய் உள்ளவன. இனறும் இருக்கிறான, இனி என்றெனறும் இருப்பவன்.

'எந்தத தததுவம் கொண்டும் அளக்கமுடியாத வன. அதாவது நீளம், அகலம், கனம் எனற உடல் தத்துவததைக் கொண்டும் அளக்க முடியாது. சொல் லாலும் அளக்க முடியாது, சிந்தையாலும் அளக்க முடியாது.

'அவனே எல்லாத தத்துவங்களுக்கும் காரண மாய் உள்ளவன

'படைக்கிற பிரம்மா, காக்கிற திருமால், தன் மயமாய் ஒடுக்குகிற சிவன் ஆகிய மூவரும் அவனே தான்.

'இந்தப் பரம்பொருள் என்ன செய்தான். சொல்லுகிறேன் கேள்

'மூலமும் நடுவும் ஈறும்
இல்லையாய் மும்மைத்தாய
காலமும் கணக்கும் நீத்த
காரணன்,—கைவில்ஏந்திச்,
சூலமும் திகிரி சங்கும்
கரகமுந் துறந்து,தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப்
பொருப்பும்விட்(டு) அயோத்திவந்தான்'
(96)

மூலமும் நடுவும் ஈறும் இல்லையாய - இடம் பற்றிய அவனுடைய உருவத்துக்கு முடி நடு அடி என்ற பாகுபாடு இல்லாததாய. ஆதி அந்தம் முடிவு என்ற காலப் பாகுபாடும் இல்லாததால, கணக்கும நீத்த - அளவிடுதல் என்பது இல்லாத காரணன் - எல்லாவற்றுக்கும் ஆதி காரணமாய் உள்ள தனிப்பெரும பரம்பொருள். கைவில் ஏந்தி - கையில வில்லை ஏந்தியவனாய. சூலமும் - சிவனுக்குரிய திரி சூலத்தையும. திகிரி சங்கும் - திருமாலுக்குரிய சக்கரம் சங்கு இவைகளையும். கரகமும் - பிரமனுக்குரிய கலசத்தையும். துறந்து - விட்டு விட்டு. தொல்லை ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு - பூர்வமான ஆல இலை, தாமரை மலர், கைலயங்கிரி இவைகளையும் விட்டு. அயோத்தி வந்தான் - அயோத்தியில் அவதரித்தான

குறிப்பு: செய்யுளிலுள்ள அபூர்வமான பாவம் அனுமனைக், கம்பரைத், தமிழை ஆக மூன்றையுமே இனம் காட்டுகிறது.

'அயோத்தியில் அவதரித்த இத்தகைய பரம் பொருளே என்னை இங்கே அனுப்பி யிருக்கிறது' என்று ராவணனுக்குப் பதில் சொன்னான்.

இந்தச் சொல் ராவணனுக்கு அடங்காத கோபத்தை மூட்டி விட்டது. 'கொல்லுங்கள் குரங்கை' என்று கட்டளை யிட்டான்.

அப்போது ராவணனது தம்பியான விபீஷணன் வந்து கொல்ல வந்தவர்களைத் தடுத்து, ராவணனிடம் 'இது தகாது. தூதனாக வந்தவனைக் கொல்லுதல் எந்த விதத்திலும் கூடாது. நீதி முறைக்கு அடுக்காதது' என்று மிக்க ஆத்திரத்தோடும் பரிவோடும் சொன்னான்.

'தொலையட்டும்' என்று சொன்னான் ராவணன். அனுமனை அப்படியே விட்டிருக்கலாம். ஆனால் அப்படி செய்யவில்லை. அனுமனது வாலில் பந்தத்தைச் சுற்றி நெருப்பை வைத்து அவிழ்த்துவிடச் சொன்னான்.

வேலையாளர்கள் வந்து மிகப் பெரிதான பந்தத்தை வாலில் சுற்றினார்கள். எண்ணெய் விட்டார்கள். நெருப்பும் வைத்தார்கள். பந்தம் சுடர் விட்டெரிந்து கொண்டிருந்தது.

ஒரு நொடியில் ஒரு திமிறு திமிறினான் அனுமன். கட்டுகளும் கயிறும் சிதறி ஓடின. அப்படியே குதித்து நகரத்து வீடுகளின் மேல் பாய்ந்து தாவித் தாவிப் போனான்.

வீடுகள் எல்லாம் தீப்பற்றி, நகரம் முழுவதும் ஒரே தீப்பிழம்பாய் எரிய ஆரம்பித்து விட்டது. லங்காதகனம் பூரணமாய் விட்டது.

அனுமனுக்கு இலங்கையில் வேலையில்லை, கடலைக் கடந்து இக்கரை சேருகிறான்

அனுமன் காரியம் இப்படி யிருக்க, ராமன் இருந்த இடத்துக்கு நாம் போக வேண்டும்.

# 8. திருவடி தொழுத படலம்

## நம் ஏற்பாடு போதாது போலும்!

1. லக்ஷ்மி தேவியை ஒத்த சீதா பிராட்டியைத் தேடுவதற்காக வாயு புத்திரனை அனுமனையும் தன் மற்ற படைகளையும், நாலா திசையிலும் அனுப்பி யிருந்தான் சுக்ரீவன். அப்படி அனுப்பியிருந்த நிலையில், ஒருநாள் ராமன் பக்கத்தில் உட்கார்ந்தான்.

சேற்றின மரைமலர்த்
திருவைத் தேர்கென,

காற்றின்மா மகன்முதல்
கவியின் சேனையை

நாற்றிசை மருங்கினும்
ஏவி, நாயகன்

தேற்றினன் இருந்தனன்
கவியின் செம்மலே. (97)

1 சேற்றின மரைமலர்த் திருவை - சேற்றில உண்டாகும், அன்று பூத்த தாமரை மலரிலிருக்கும லக்ஷ்மியை—சீதா பிராட்டியை. தேர்க என - தேடும்படியாக. காற்றின் மாமகன் முதல் - வாயு புத்திரனான அனுமன் முதலான. கவியின் சேனையை - குரங்கினத்தாராகிய படையை. நாற்றிசை மருங்கினும் ஏவி - நாலாபக்கமும் போகச் செய்து. நாயகன் தேற்றினன் இருந்தனன் கவியின் செம்மலே - ராமனை மனம் தேறும் படியாகச் செய்துகொண்டு பக்கத்தில் இருந்தான் குரங்குகளுக்கு அரசனான சுக்ரீவன்!

2. ராமன் மிக்க துயரத்தில் ஆழ்ந்திருக்கிறான். 'நாம் செயதிருக்கும் ஏற்பாடு ஒன்றும் போதாது. பெரிய அவமானத்துக்கு உள்ளாகப் போகிறோம் போலிருக்கிறது'' என்று சுக்ரீவனிடம் சொல்லு கிறான்.

ஆரியன அருந்துயர்க்
கடலின் ஆழபவன,—

'சீரிய(து) அன்றுநம்
செய்கை; தீர்வரும்

பூரிய வெம்பழி
பொடித்த தாம,எனச்,

சூரியன சிறுவனை
நோக்கிச் சொலலினன (98)

2. ஆரியன் அருந்துயர்க் கடலின் ஆழபவன - ராமன் பெருந்துயருக்கு உளளானவனாய. சீரியது அன்று நம் செயகை - நம்முடைய ஏறபாடு சரியாக இருப்பதாகத் தோன்றவில்லை. தீர்வரும் பூரிய வெம்பழி பொடித்ததாம் என- என்றெனறைக்கும் தீராத கீழான அவமானம் உணடாகப் போகிறது என்று. சூரியன் சிறுவனை நோக்கிச் சொலலினான்- சுக்ரீவனைப் பார்த்துச் சொலலுகிறான் ராமன.

குறிப்பு· 'சீதையைத் தேட ஏதோ பலரை அனுப பிறேனும். ஆனால் கண்டு பிடிப்பார்கள் என்று தோன்ற வில்லை' என்பதாக மனம் இடிகிறது ராமனுக்கு.

## தொழவில்லை ராமனை!

3. ராமனும் சுக்ரீவனும் உட்கார்ந்திருக்கிறார்கள். ராமன் பேசுகிறான் 'தேடிப் போனவர்கள் வரவேண்டிய நாட்கள் கடந்து விட்டன. தென் திசை நோக்கிப் போனவர்கள் இன்னும் இங்கு வரவில்லை.'

'குறித்தநாள இகந்தன;
குன றத் தெனதிசை

வெறிக்கரும குழலியை
நாடல் மேயினர்

மறித்திவண் வந்திலர்;
மாண்டு ளார்கொலோ,—

பிறித்(து)அவாக் குறறுள(து)
எனனை பெறறியோ.' (99)

3 குறித்த நாள இகந்தன-கெடுவாக வைதத நாட்கள எலலாம கழிநது விடடன. குன்றத தென திசை – குனறுகள் அடர்ந்த தென திசையை நோககி. வெறிக் கரும் குழலியை நாடல மேயினா – வாசனை யுளள கருங் கூந்தல கொணட சீதையைத தேடிப போனவர்கள். மறிதது இவண வநதிலர் – திரும்பி இஙகே வரவிலலை. மாண்டுளாா கொலோ-இறந்து போய விட்டார்களோ. பிறிதது அவர்க்கு உற்றுளது என்னை பெற்றியோ–மற்றப்படியாக அவர்களுக்கு நேர்ந்தது எனன விதமான காரியமோ?—ஆபத்தோ. பிறித்து-பிறிது.

4. 'சீதை ஒரு வேளை இறந்து போயிருக்கலாம். அப்படியானால் "அந்தச் செய்தியை ராமன் முதலி யோரிடம் சொல்லி என்ன செய்ய? உயிர் துறப்பதே நல்லது" என்று எண்ணி அவர்களாக இறந்து போனார்களோ!

'மாண்டனள் அவளிவண்
மாண்ட வார்த்தையை

மீண்டவர்க் குரைத்தலின்
விளிதல் நன்றெனப்

பூண்டதோர் துயர்கொடு
பொன்றி னாகொலோ,

தேண்டினா இன்னமும
திரிகின ராகொலோ!' (100)

4 மாண்டனள அவள-சீதை இறந்து போயிருக்கலாம் — அதைக் கணடு. இவண மாணட வார்ததையை - இநத இடத்தில் இப்படி இறந்து போன செய்தியை. மீணடு அவர்க்கு உரைத்தலின விளிதல நனறு எனு - திரும்பிப்போய் ராம லக்ஷமணர்களுககுச சொலலுவதை விட உயிர் துறததல நமககு நலலது எனறு எணணியவராய. பூணட தோர் துயர்கொடு - பறறிய துயரததினல—இறந்து போய் விட்டாரகளோ. அலலது—தேணடினர் இன்னமும் திரிகினர் கொலோ - தேடிக்கொணடிருப்பவர்களாய் இன்னமும் நாலா பக்கமும் திரிநதுகொணடு தான இருககிறர்களோ— என்று ராமன் சொல்லுகிறன்

5. இபபடி ராமன சுகரீவனிடததில் சொல்லிக் கொணடிருககும்போது தெறகு திக்கில் ஒரு பிரகாசம் தோனறுகிறது

எனபுழி அனுமனும,
எனபவன
தெனபுறத்(து) உளனெனத்
தெரிவ(து) ஆயினன,—
பொனபொழி தடககையப
பொருவில வீரனும,
அனபுறு சிநதையன
அமைய நோககினன (101)

5 எனபு உழி-போனவர் கதி எனன ஆயிறறோ என்று வருநதி ராமன் சொலலிக் கொணடிருக்கும் சமயத்தில. அனுமனும – அனுமனெனவன. இரவி எனபவன தென புறதது உளன என – சூரியன என்று சொலலபபடுகிறவன் கிழக்குத திசையிலத தோனறுவதிலலைபோலிருக்கிறது; தென திசையிலப போயத தோனற ஆரம்பிதது விடடான என்று சொலலும்படியாக. தெரிவது ஆயினன - செம் மேனியோடு கணணுக்குப புலப்படடான. பொன பொழி தடக்கை அபபொருவில வீரனும–தானம் செயவதில்ப பழகிச் சிறநத கையினனன ஒப்பறற வீரனும அன்புறு சிநதையன்–அனபோடு கூடிய மனததவனாய. அமைய நோக்கினன– ஆசையோடு பார்ததான்.

6. அடுத்த நிமிஷமே ராமன் முன்னிலையில் அனுமன் வந்து விட்டான் ஆனால் ராமனை வணங்கவில்லை.

எய்தினன் அனுமனும்,
எய்தி, ஏந்தலைத்

மொய்கழல் தொழுகிலன்;—
முளரி நீங்கிய

தையலை நோக்கிய
தலையன், கைகொடு

வையகந் தழீஇ நெடி(து)
இறைஞ்சி வாழ்த்தினான் (102)

6. எய்தினன் அனுமனும் - ராமன் பக்கத்திலேயே வந்துவிட்டான் அனுமன். எய்தி - பக்கத்தில் வந்ததும். ஏந்தலைத் மொய்கழல் தொழுகிலன் - ராமனது அழகு செறிந்த திருவடியை வணங்கவில்லை—வேறு என்ன செய்தான்! முளரி நீங்கிய தையலை நோக்கிய தலையன் - தாமரையை விட்டு நீங்கிய லக்ஷ்மி தேவியான சீதை இருந்த தென் திசையை நோக்கியவனாய்த் தலையைத் திருப்பிக்கொண்டு. கை கொடு வையகம் தழுவி - இரண்டு கைகளையும் பூமியிலேயே பொருந்தும்படியாக வைத்துக் கூப்பினவனாய். நெடிது இறைஞ்சி வாழ்த்தினான் - நெடிதாகக் கீழே விழுந்து நமஸ்கரித்து (தெற்கு நோக்கித்தான்) சீதா தேவியை வாழ்த்தினான்—'தாயே! தெய்வமே!' என்றெல்லாம் வாழ்த்தினான்.

குறிப்பு ராமனை நெருங்கிய மாத்திரத்தில் அனுமன் மனதில் சீதையின் உருவம் தோன்றிவிட்டது! அடக்க முடியாத உணர்ச்சியும் பக்தியும் மேலிட்டு விட்டது அப்படியே சீதையிருந்த திசையை நோக்கித் தரையில் விழுந்து நமஸ்கரிக்கிறான். அபூர்வமான உணர்ச்சி பாவத்தில் வெளியாகிறது கவி.

## ஒப்பு எனக்கும் இல்லை!

7. இலங்கையிலிருந்து வந்த அனுமன் தன்னை வணங்கவில்லை. சீதாபிராட்டி இருந்த திசையை நோக்கி அல்லவா சாஷ்டாங்கமாக விழுந்து வணங்குகிறான் என்பதை அறிந்துகொண்ட ராமன், 'அனுமனோ அரிய திறம் படைத்த வீரன். அவன் செயல் இப்படி நிகழ்கிறது. வேறு என்ன வேண்டும்?' என்பதாக எண்ணுகிறான்.

திணைதிறல அவனசெயல்
    தெரிய நோக்கினான்;
வண்டியல் ஓதியும
    வலியள, மறறிவன
கண்டதும் உணை(டு), அவள
    கறபும் நனறெனக்
கொணடனன குறிபபினால்
    உணருங கொளகையான  (103)

7 திணைதிறல அவன செயல - வலிமையும் திறமையும் கொண்ட அனுமன செயலை தெரிய நோக்கினான் — நனறாகப் பார்த்துககொணடான (ராமன) வணடியல ஓதியும வலியள - சீதை சௌககியமாகவே இருககிறாள்! மற்று இவன் கண்டதும் உணடு — இநத அனுமன அவளை நேரிலக் கணடிருககிறான அவள கறபும நன்றெனக் கொணடனன் - அவளுடைய கறபு நிலையும் பழுது படாமல இருக்கிறது என்பதை மனசிலத திட்டமாயக கொணடான். குறிபபினால உணரும் கொளகையான - வாரத்தைகளால அல்லாமல அனுமனது செயலின குறிப்புகளைக கொண்டு விஷயததை அறிந்து கொள்ளககூடியவனான ராமன்.

8. அனுமனது செயலைப் பார்த்து எல்லா வற்றையும் யூகித்துத தெரிந்து கொண்டான். பிர மித்து அப்படியே நின்றுவிட்டான் ராமன்.

சீதை யிருந்த தெற்கு திசையை நோக்கிச் சாஷ்டாங்கமாக விழுந்துகிடந்த அனுமன் சிறிது நேரங் கழித்துத் தன் வசததுக்கு வந்து எழுந்து நின்று ராமனைப் பார்ததுப் பேசுகிறன்.

'கற்புக்கு அரசியான சீதாதேவியை நேரிலேயே, இந்த என் கணகளாலேயே பார்தேதன். சமுத் திரத்திலுள்ள இலஙகையில்ததான் பாாதேதன்.'

'கணடெனன கறபினுக்(கு)
அணியைக கணகளால,

தெணதிரை அலைகடல
இலஙகைத தெனநகா,—

அணடாநா யக! இனித
துறநதி ஐயமும

பணடுள துயரும' என(று)
அனுமனா பனனுவான (104)

8. தெண்திரை அலைகடல இலங்கைத் தென நகர் — தெளிநது திரைகினற அலைகளோடு கூடிய கடலின நடுவே யுள்ள இலஙகையாகிய நகரததிலே—கணடெனன. அணடர் நாயக - தேவர்களுக்கு நாயகனை ராமமூர்ததியே இனித் துறநதி ஐயமும பணடுள துயரும் - இனி விட்டு ஒழிபபாயாக சந்தேகததையும் இதுவரை யிருநத துயரத்தையும். என்று அனுமன் பனனுவான — என்று அனுமன அழுததமாய்ச் சொனனன்.'

9 ராமனிடத்தில சீதையை நேரில்க் கணட தாகவும் இலங்கைத் தீவில் இருப்பதாகவும் சந்தேகம் வேறு யாதொன்றும் வேண்டாம் என்பதாகவும் சொல்லி முடித்ததும் மனசில் உண்டான பெரு மிதத்தை அப்படியே கொட்டுகிறான் அனுமன்

'புருஷ லக்ஷணத்துக் கெல்லாம் எடுத்துக் காட்டாய் உள்ளவனல்லவா நீ! உன் தந்தை தசரதச் சக்கரவர்த்தியின் பெருமை எப்பேர்ப்பட்டது? மிதிலைக்கு அரசனான ஜனகன், முனிவர்களுக்கு எட்டாத ஞானத்தை அடைந்த மகான் அல்லவா? சீதா பிராட்டி உங்கள் மூவருக்கும் எப்படி அமைந் திருக்கிறாள்!

'உனபெருந் தேவிஎன னும
உரிமைக்கும், உனனைப்பெற ற

மனபெரு மருகிஎன னும
மாண்புகக்கும், மிதிலைமன னன

தன்பெருந தனயைஎன னும
தகைமைககும, தலைமைசான றாள,-

எனபெருந் தெயவமஐ யா!
இன னமுங கேட்டி!'' யென பான. (105)

10 அனுமனது எக்களிப்பு மேலும் பொங்கி வருகிறது.

9. மருகி - மருமகள தனயை – புதல்வி. தலைமை சான்றாள – ஒதத உயர் குணம் படைத்தவள. என பெரும் தெயவம் ஐயா–மனைவி முறை, மருகி முறை, மகள் முறைக்கு ஒப்பறறவளாய் இருக்கிறாள், என விஷயமாக நான் என்ன சொலல! எனககு அவள் குல தெய்வம் தான்! கேட்டி என்பான– கேட்பாயாக எனறு சொலலுகிறான—ராமனிடம்.

'பொன்னைப் போல் மதிப்புள்ள லோகம் வேறு ஒன்றில்லை. பொன்னுக்குப் பொன் தான் ஒப்பு. அதே போலச் சிறையிலுள்ள கஷ்டத்தையெல்லாம் அற்புதமாய், தெய்வீகமான முறையில் சகித்துக் கொண்டு நேர்மையில் நிற்கிருளே சீதா பிராட்டி, அவளுக்கு ஒப்பு அவள் தான். அதேபோல அவளுக்கு வாய்த்த நாயகனுன உனக்கு ஒப்பு நீ தான். அதில் யாதொரு சந்தேகமுமில்லை!'

'பொனஅல(து) இல்லைபபொன் னை
ஒப்பெனப, பொறையின்நின் ருள்

தனஅல(து) இலலைத்தன னை
ஒபபெனத், தனக்குவாய்த் த

நினஅல(து) இல்லைநின் னை
ஒபபென, நினக்குநேரந் த

எனஅல(து) இலலைஎன னை,
ஒபபென எனக்குமஈந் தாள. (106)

10 பொனனை ஒபபு பொன அலலது இலலை என்பது வழககியல ஒபபு என்– சமமாய இருப்பது போல தனக்கு வாயத்த – தன குலப பெருமைக்கும தககவாறு கணவனுக வாய்தத நினக்கு நேரநத – எததனையோ பேர் இருகக உனககு ஏதோ ஒரு தூதனுக நேர்நத எனனை ஒபபு, என அலது இலலை என எனக்கும ஈநதாள – சீதா தேவியைக் காண எனக்குத் தானே கொடுத்து வைததது ஆகையால நானும் ஒப்புயாவு அறறவன் எனனும் பெரிய பதவியை எனக்கும் கொடுத்து விட்டாள்

குறிபபு பகதி ஈடுபாட்டிலிருநது விளைந்த எக் களிபபுச் செயயுளில அருமையான உருவம் எ(

உளளத்தில உண்டான உவகைப் பெருக்கை இரணடு செய்யுளகளும் அறபுத ரஸமாய்க் கொட்டுகின்றன!

## உயர்ந்துவிட்டது பெண்குலம்!

11 சீதா தேவியைக் கண்டு கொண்டோமே என்ற எக்களிப்பில் அனுமன் ராமனிடம் என்ன வெல்லாமோ சொல்லுகிறான் அதனால் தனக்குக் கிடைத்த பாக்கியத்தையும் பெருமையையும் பற்றி ஆவேசத்தோடு பேசுகிறான். தன்னைப் பற்றிக்கூட பேச முடிந்தது ஆனால் சீதையைப் பற்றிப் பேச மறந்து விட்டான் என்று கூடச் சொல்லத் தோன்றும். இனி வருகிறது சீதையைப் பற்றிய பேச்சு!

'ராமனே! இலங்கைக்குப் போனேன் சீதா பிராட்டியையா கண்டேன், அல்ல!'

'விற்பெருந் தடந்தோள்வீர!
வீங்குநீர் இலங்கைவெற்பில்

நற்பெருந் தவத்தளாய
நங்கையைக் கண்டேன்அல்லேன்,—

இற்பிறப்(பு) என்பதொன்றும்,
இரும்பொறை என்பதொன்றும்,

கற்பெனும் பெயர(து)ஒன்றும்
களிநடம் புரியக்கண்டேன்!'' (107)

11 விற்பெரும் தடந்தோள வீர-வில்லேந்திய அபூர்வமான பெரிய தோள் கொண்ட வீரனே-ராமனே. வீங்கு நீர் இலங்கை வெற்பில்-அலைமோதும் சமுத்திரத்திடையே உள்ள இலங்கைத் தீவின் மலைப் பிரதேசத்தில் நற்பெரும் தவத்தளாய நங்கையை-உயர்ந்த தூய தவஞ் செய்பவளான பெண்ணொருத்தியை. கண்டேன் அல்லேன்-கண்டேன் என்று சொல்ல முடியாது ஆனால் என்னத்தைக் கண்டேன். இற்பிறப்பு என்பதொன்றும்– உயர்ந்த குடிப் பிறப்பு' என்னும்

12. உலகததில் நெடுகிலும் ஆடவரை மேல் எனறும், பெணடிரைத தாழ்ந்தவா என்றும் கருதி வந்திருக்கிறாகள். அப்படியே நடததியும் வந்திருக்கிறாகள். வீர தீரமான மனசு ஆடவருக்கு உரியதென்றும், பெணடிருக்கு உரியதல்ல வென்றும் புறவாரியாகப பாாததும் பேசியும் வந்திருக்கிறாகள்

தததுவமும இரும பொறை எனப தொனறும் — லக்ஷியப பொருளை அடைவதறகாகக காததிருக்கும பொறுமை எனனும் அரிய தத்துவமும் கறபு எனும பெயாது ஒனறும— ஏதோ கறபு கறபு எனறு ஒரு வார்த்தையைச சொலலிக் கொணடிருககிறாகள, ஆனல அவாகளுககு அது எததகைய பெருமை, சக்தி எலலாம வாயநதது எனபது தெரியாது நானதான அதை யெலலாம் நேரிலக கணடு தெரிநது வநதிருககிறேன பெண இதயததில ஒரு அரிய தததுவம இருககிறது. அது நாடுவ தெலலாம நாயகனுடைய நலம, புகழ இவைகளையே அதறகாக எந்த பயஙகரமான விபததையும எதிாதது நிறகவும, உயிரைத துறபபது எளிதா யிருநதாலும அபபடித துறநது விடாமல் உயிரை வைததிருககவும, செயய வலலது அது அததகைய அபூாவ திடசிததம வாயநத கறபெனனும அநதத தததுவமும களிநடம புரியக் கண்டேன - அநத மூனறு தததுவஙகளும எககளிபபோடு கூததாடின எனறு சொலல வேணடும்.

குறிபபு ஒரு உருவத்தின சக்தியையும அழகையும் அசையாத நிலையில வைததுப பாாககும்போது தெரியவா செயயும்! தெரியாது கோலாகலமாய் உறுபபுக்கள் எலலாம் ஒனறு சேர்நது தாணடவம் ஆடும் போதுதான் சக்தியும அழகும் தெளிவாயப் புலனுகினறன. அபபடித தெளிவாய்ப புலப்பட்டன குடிப் பிறப்பு, பொறுமை, கறபு எனற மூனறு தததுவஙகளும்.

ஆனால் உள்ளத்தின் அடிப்படையான தத்துவத்தைப் பார்க்கும்போது பெண்டிருடைய திட சித்தம் ஆடவருக்கு இல்லை என்றே சொல்லத் தோன்றும்.

சீதையின் நிலையை வெகு தெளிவாய் மனசில் பதிய வைத்துக் கொள்ளுகிறார் கவிஞர். அதைவிடப் பரிதாபமான நிலை ஒன்று உண்டென்று எண்ண வேண்டியதில்லைதானே. இந்தச் சோக நிலையானது அவளது அதி அற்புதமான உறுதியில் நிற்கிறது.

நாயகன் வருகையாகிய லக்ஷியத்தை நோக்கியே நிற்கிறாள். உயிரை விடுதல் எளிதுதான். அது செய்யவில்லை அவள். லக்ஷியத்திற்காகத் தத்தளிக்கும் உயிரை நிலைக்க வைத்துப் பாது காக்கிறாள். அப்படியானால் பெண்மை என்ற தத்துவத்தை என்ன என்று சொல்லுகிறது!

'சோகத்தாள் ஆய நங்கை
கற்பினால், — தொழுதற்கொத்த
மாகத்தார் தேவிமாரும்
வான்சிறப் புறுவார், மற்றைப்
பாகத்தாள் இப்போது ஈசன்
மகுடத்தாள், பதுமத்தாளும்
ஆகத்தாள் அல்லள், மாயன்
ஆயிரம் மௌலிமேலாள்' (108)

12. சோகத்தாள் ஆய நங்கை கற்பினால - சோகத்தில் மூழ்கி யிருக்கும் சீதையின் உறுதியான நிலையைக் கண்ட பிறகு தொழுதற்கு ஒத்த மாகத்தார் தேவிமாரும் - வழிபடுவதற்கு உரிய தேவர்களது (பிரமன், இந்திரன், சூரியன்

முதலியோரது) மனைவியரும் வான் சிறப்பு உற்ருர்-உயர்நத நிலையை அடைநது விட்டார்கள் எனறு சொலலத் தோனறு கிறது. மற்றை-மேலும். பாகத்தாள-இடது பாகததிலுள்ள பார்வதி தேவி. இபபோது ஈசன் மகுடததாள - இப்போது சிவபெருமானது தலைமேல வீற்றிருககிருள். பதுமத்தாளும் ஆகததாள அலலள - லக்ஷ்மி தேவியும் திருமாலின மார்பில இலலை ஆயிரம மௌளி மேலாள - திருமாலின ஆயிரக் கணககான முடிகளுக்கும மேலாய் ஒரே வியாபகமாய வீறறிருககிருள

குறிபபு சீதையின் மன உறுதியையும தீரத்தையும் பார்த்த பிறகு இப்படி யெலலாம் சொல்லத் தோன்று கிறது அனுமனுககு. உளளததிலிருநத உவகை அப்படி யெலலாம் குதிததோடி வருகிறது

இநத உணமைகளைக் கேட்டுப பருகுகிருன ராமன. அவனது உளளம ஆனந்தப பெருககுககு நிலயமாகிறது.

சீதை இலஙகையில இருககிருள மீடக வேணடியது அடுதத வேலை.

சுந்தர காணடம
முற்றிறறு.

# 1. கடவுள் வாழ்த்து

## நாறுவது ஒன்ருவது!

சமுததிரததைப பற்றிக் கொஞ்சம் ஆராயலாம். சமுத்திரம் உலகம் முழுவதும் பரவி வியாபித் திருக்கிறது எவவளவு தூரததில் எட்டியுள்ள வளேகுடா ஆனுலும், அது சமுததிரததைச் சேர்ந்தததான்

சில இடங்களில் சமுததிரமானது ஒடுங்கி மைல்க் கணக்காகவே நாட்டுக்குள் செலவதுண்டு. அதற்கு 'நெடுஙகழி' என்று பெயா

மேலே சொனன வளேகுடாக்களுக் குள்ளும் நெடுங் கழிகளுக்குள்ளும மாததிரம் செல்வதல்ல அந்த சமுத்திரம்

வேறு எஙகெல்லாமோ செல்லுகிறது அது. சமுததிரததிலுள்ள நீாதானே வானமெங்கும் ஆவியாய்ப பரவுகிறது. அந்த ஆவி மேகமாய்த் திரளுகிறது. மேகம் உலகம் முழுவதும் ஓடி மழை யாய்ப பெயகிறது.

மழை நீரானது புல் பூண்டுகளுக் கெல்லாம் வேரில் இருந்து தளிா வரையும் போய் நிறைகிறது. அப்படியே சகல பிராணிகளுக்குள்ளும், நம்முடைய மானுஷ உடலுக்குள்ளுமே சென்று நிறைகிறது. ஆகவே ஏல்லாம் சமுத்திர மயந்தான். இனி:

பசும் புல்லை எடுத்துக் கொண்டோமானால் அதில் சமுத்திரம் வந்து பெருகி இருக்கிறது என்று சொல்லுதல் பொருந்தும். ஆனாலும் புல்லைத் தனிப்பட்ட நீரபபகுதி எனறும் சொல்லலாம். ஆகவே புல்லைப் பாாதது இது சமுததிரம் அல்ல என்றும் சொல்லலாம், சமுததிரமேதான் என்றும் சொல்லலாம்.

கடவுள் தததுவமானது எங்கும் ஒரே படியாய் ஒவ்வொரு வஸ்துவிலும் நிறைந்து நிற்கிறது – (நீரைப் போல) ஆனாலும் ஒவ்வொரு வஸ்துவிலும் ஒரு நியதியின படியே இயங்குவதால் தனிபபட்ட பல வஸ்துக்கள் என்றும் கடவுள் தததுவத்தைக் குறிபபிடலாம்.

மேலும், எந்த வஸ்துவையும் சுட்டி இது கடவுள் அல்ல எனறும் சொல்லலாம் கடவுள்தான் எனறும் சொல்லலாம். (கடவுள் தத்துவம் தான் எல்லாப பொருள்களிலும் நிறைந்திருக்கிறதே!)

ஒனறே எனனில ஒனறே யாம,
பலஎன றுரைக்கில்ப பலவே யாம,

அனறே எனனில அனறே யாம,
ஆமஎன றுரைகில ஆமே யாம,

கடவுள தததுவமானது எங்கும் நிறைந்ததாய, எல்லாவற்றிலும் நிறைந்ததாய், எல்லாவற்றையும் இயக்குவதாய இருக்கிறது, ஆகையால் கடவுளை உணடென்று சொல்லுவதில்க் கஷ்டம் இல்லை.

இனி

எல்லாவற்றையும் இயக்குவதாய் இருந்தாலும் அறிவியான ஒரு நியதி தத்துவததின்படியே எல்லா இயக்கமும்—உயிா வாக்கஙகளின் பிறப்பு, வளர்ச்சி, மறைவு யாவுமே—நிகழ்கினறன. ஆகவே நியதி ஒன்றுதான மிஞ்சுகிறது. கடவுளது செயல் என்று சொல்லுவதற்கு ஒன்றும் இல்லாததால், கடவுளை இல்லை என்றும சொல்லிவிடலாம்.

உண்டே எனனில உண்டே யாம,
இலதென றுரைக்கில இலதே யாம்,

மேலே சொன்ன நியதியின் சாவ வியாபகம் காரணமாக ஆணவமாகிய நான' என்பதும், கடவுள் தத்துவததிறகுள்ளேயே அடஙகி விடுகிறது. கடவுள் ததது வமானது இல்லை எனற லக்ஷணததுக்கு வரும்போது அதன சிறு பகுதியாகிய ஆணவமும் இல்லை எனறுதானே ஆகும்,

இறைவன காரியமே அந்த அழகில் இருக்கிற தாம், பிறகு நாம் ஒருவா உணடென்று சொல்லு வதற்கு இடம் எஙகே? இபபோது பாடலைப் பார்க்கலாம்

சநதம்

தான தான தானு தன்
தான தான தானு தன்

ஒனறே எனனில ஒனறே யாம்,
பலஎன றுரைககிலப் பலவே யாம்,

அன்றே எனனில அனறே யாம்,
, ஆம்என் றுரைக்கில் ஆமே யாம்,

உண்டே என்னில உணடே யாம,
இலதென றுரைககில இலதே யாம;

நனறே நமபி குடிவாழுக கை!
நமககிங கெனறே பிழைபபம மா!
(109)

1. ஒ ன றே ெய ன னி ல ஒனறே யாம்: வேறென்று என்பது இல்லாமல் எங்கும் நிறைந்து ஒருவனாக இருக்கிறான் இறைவன், என்று சொல்ல லாம். இதுதான உணமை. ஆனாலும் பலவகைப் பட்ட தனிதத இயக்கஙகள் போலவும் தோற்ற மளிக்கிறான அவன. அதனால் பல என்றும் சொல்லலாம்

2 அ ன றே எ ன னி ல அனறே யாம ஒரு வஸ்துவைக் குறிதது, 'அது அல்ல இறைவன்' என்று சொல்லுவது சரியான வார்ததைதான் ஒரு புல்லைப் பாரதது, 'இது அல்ல எங்கும் நிறைந்த இறைவன்' என்று சொல்லுவதில்ப பொருததம் இருக்கததானே செயகிறது ஆனாலும் ஒரே மயமான இறைவனது பகுதிதானே புல. அதனால்ப புல்லும் இறைவன்தான் என்று சொல்ல இடம் தருகிறது— 'ஆம என றுரைக்கில ஆமே யாம'

3 உ ண டே எ ன னி ல உ ண டே யாம: உலகததில் எணணிறந்த அற்புதமான தததுவங் களைப் பார்க்கிறோம். அணட பிணட சராசரங் களில் நிகழும் நிகழ்ச்சி எல்லாம் அற்புதங்களே. அந்தச் செயல்களுக்கு யாரும் உரியவர் அல்லர். இறைவனது செயல்கள்தான் அவை என்று சொல்லி, இறைவன் உணடென்பதைச் சாதிப்பது எளிது.

இறைவன் இல்லை என்பதைச் சாதிப்பதுதான் கஷ்டம். அதையும் நம்மவர்கள் ரஸமாய்ச் சாதிக்கிறார்கள். ஒரு உதாரணம்

நம்முடைய படுக்கை அறை மாடியில் இருக்கிறது. கீழ்க்கட்டில் இருந்து, வேலை பார்பபோம், வாசிப்போம். இரவு பதது மணி ஆகவும் வாசல்க் கதவை அடைததுத் தாழிட்டுவிட்டு, விளக்கையும் அணைத்துவிட்டுப் படிவழியாக மேலே ஏறிப் படுக்கை அறைக்குள்ப் போயக் கட்டிலில்ப படுததுக் கொள்ளுவோம்

ஒவ்வொரு நாளுமே இரவு பதது மணி ஆனதும் இததனை காரியத்தையும் செயகிறோம்

ஒரு மாசம் ஆகிவிடுகிறது. கட்டிலில்ப் படுததிருக்கிறோம் படுததுக் கால்மணி நேரம் ஆகிவிட்டது. ஒரு சந்தேகம் பிறக்கிறது 'கதவை அடைக்க வில்லையோ' எனற சந்தேகம். அப்படியே எழுந்திருக்கிறோம், விளக்கைப போட்டுக் கொள்ளுகிறோம், படி வழியாகக் கீழே இறஙகுகிறோம். கீழே வந்து பாாக்கிறோம்.

கதவு அடைபட்டிருக்கிறது, தாழையும் போட்டிருக்கிறது.

இதைப் பாாதத உடன் 'ஓ ஹோ கதவை அடைத்ததிலும் தாழிட்டதிலும் குறையில்லை, நாமே தான் செய்தோம்' எனறு ஞாபகததிற்கு வருகிறது. பல நாள் மேலே சொன்ன காரியங்களை ஒரே ஒழுங்கு முறையில் செய்து வந்ததால் 'நாம் செய்தோம்' என்ற உணாச்சி மனசைவிட்டுக் கழன்று விடுகிறது. இந்த ஒரு நியதி (—ஒழுங்கு)

காரணமாகவே செயலுக்குரிய 'நான்' எனபது இல்லாமல்ப் போகிறது.

கடவுள் தத்துவமானது, அநாதியாய், இறுதி இல்லாத காலததைையே எட்டுவதாய், எங்குமே ஊடுருவி நிற்பதாய் உள்ள ஒரே நியதி தத்துவம் தான்.

இந்தப பரிபூரணமான நியதிக்குள் செயலுக் குரிய அம்சம் ஏதும் புகுதற்கு இடம் இல்லை, இறை வனது செயலுக்கும் இடம் இல்லை. ஆகவே இறை வனும் இல்லை—'இலதென றுரைக்கில இலதேயாம'

4 நனறே நமபி குடிவாழகை நம்முடைய எஜமானனான இறைவனது ஸ்தானம் இந்த அழகில் இருக்கிறது—இல்லை எனற நிலையில் இருக்கிறது. நமக்கிங் கெனறோ பிழைபபமமா இந்த இறைவனது கருவியாய உள்ள நமக்குச செயல என்பது ஏது? செயல் எனபது இல்லையானுல் 'நாம் என்பதும் இல்லை தானே.

செய்யுளில் உளள ஓசை அம்சங்களைக் கவனிக்க வேண்டும். 'ஒன்றே யென்னில்' என்பதில் வேகமும் அழுததமும் இருக்கிறது 'என்றுரைக்கில்' என்பதில் இளக்கமான தொனிதான் இருக்கிறது. ஒன்றென் றும், அன்றெனறும், உணடென்றும் சொல்லுவது தான் உண்மை. பல என்றோ, ஆம் என்றோ, இலதென்றோ சொல்லுவதில் ஒரு வகையான போலி ரஸம் தான் இருக்கிறது. உண்மை வேகத்தையும், போலி ரஸத்தையும், பிரித்துக் காட்டுவதற்காகவே வேறுபட்ட ஓசைகளைக் கையாண்டிருக்கிறார் கவிஞர்.

முரண்பட ஒன்றென்றும், பலவென்றும் சொல்லுவதிலேயே ஒரு ஹாஸ்யம். அப்படியே, அன்று, ஆம், உண்டு, இலது, எனபதிலும். இல தென்று முடிப்பதில் அதிக ஹாஸ்யம். ஹாஸ் யத்தின் உச்சம் கடைசி அடியில் அழகாய உரு எடுககிறது.

அரிய பெரிய சமய தத்துவங்களோடு கம்பர் எப்படி விளையாடுகிறா என்பதைச செய்யுளின் பாவ உருவத்தில்த தெளிவாயப் பாாககலாம்.

## 2. மந்திரப் படலம்

### சிற்ப தேவதைக்குப் பூஜை

1 'கற்பின தெய்வமாய் இலஙகையில் இருக்கிருள் சீதாதேவி என்று அனுமன் சொன்னுன். ராமன் சுகரீவன் முதலியவர்களுக்குச் சீதாதேவியைப் பற்றிய சஞ்சலமெல்லாம் நீஙகிற்று. ராவணனேடு போர புரிவதற்கான ஏற்பாடுகளைப் பற்றி யோசிக்கலாஞர்கள்.

இதோடு சுந்தரகாணடம் முடிகிறது. இனி, இலஙகைக்குப் போகிறேும்.

எரிபட்ட இலஙகையைப புதுபபிதது விட்டாாகள் அவவிதம் திருததி அமைதத நகரை ராவணன் நடந்து போயச சுறறிப பாாக்கிருன்

மனிதன எததனையோ அற்புதமான பொருள் களைச செயதிருக்கிருன். கோயில்களையும் கோபுரங் களையும் வெகு அருமையான வேலைப்பாடுகளோடு நம்மவாகளும், இந்தத தமிழ் நாட்டில் நிறுவி இருக் கிருாகள்.

ஆனுலும், ஒரு தாமரை மலரையும் அதன அமைபபையும் கூாந்து பாாததுவிட்டால் நம்முடைய எந்தப புராதனமான சிற்பமும், தாமரை மலரில்க் காணுகிற எணணிறந்த அற்புத அம்சஙகளின் பக்கத்தில் வர முடியாது.

பிரம்ம சிருஷ்டியில்க் காணும் சிற்பத்தொழிலே சிறந்த சிற்பத தொழில். நம்மவர்கள் இந்த உண்மையை உணர்ந்து, சிற்பக் கலைகளுப் பிரம்மனை அதி தேவதையாகக் கொண்டார்கள். பிரம்மனுக்கு வழிபாடான கிரியைகளையும் பக்தியுடன் செய்து வந்தார்கள்.

நாடக இயலில் ஒரு காட்சி

பிரம்ம தேவனும் தேவ தச்சனும் நம் கண்முன் வருகிருர்கள். எஙகே போகிருாகள் பார்க்கலாம்.

அனுமனுடைய வாலிஞல் சாம்பலாய ஒழிந்து போன இலங்கை நகர ததிற்குள் பிரவேசிக்கிருாகள்.

பிரம்ம தேவன தேவ தச்சனை நோக்கி இன்னின்ன முறையில் திருததமாக நகரை அமைததுக் கட்ட வேண்டும் என்று கட்டளை இட்டான். தேவ தச்சன் அந்தக் கட்டளைக் கிணங்கவே இலஙகை நகர் முழுவதையும் கட்டி முடிததான்

சநதம

தானன தானன
தான தனனன

பூவருமு அயனொடும
புகுநது, பொன நகா

மூவகை உலகினும
அழகு முறறுற.

1 பூவருமு அயனொடும் புகுந்து - தாமரையில் எழுந தருளும் பிரம்ம தேவனேடு இலங்கைக்குளப போய. பொன நகா - அழகான புதிய இலஙகை நகரை மூவகை உலகினும் அழகு முற்றுற - கீழ உலகம், பூ உலகம் வானுலகம் ஆகிய மூனறு உலகஙகளிலும காணமுடியாத அவவளவு சிறநது பூரண அழகோடு கூடியதாய்

ஏவின இயற்றினன
கணத்தின என்பரால்

தேவரும மருளகொளத்—
தெயவத் தசசனே. (110)

2. தெயவத தச்சன் நகரை அமைத்து முடித தான். பல வாணக் கற்களைக்கொண்டு வீடுகளையும், அரணமனைகளையும் கோயிலகளையும் அழகு பெற அமைததான் பொனனாலும் நவரத்தினஙகளாலும் அமைநததோ எனறு சொல்லுமபடியாக இருந்தது

1 ஏவின இயற்றினன – பிரமம தேவன எடுத்துக காட்டியபடி செயது முடிததான. கணததின எனபரால - ஒரு கணததில எனறு சொலலுமபடி அவவளவு துரிதமாக தேவரும மருள கொள - ஏதோ வானவர்கள் எனறு இருக கிறாரகளே, அவாகளே அதிசயிக்கும்படி தெயவத தச்சனே - தெயவ சகதி வாயநத மயனே—இயற்றினான்

குறிபபு கம்பா கட்டிடஙகள கட்டுவதையும நகரம நிரமாணிபபதையும பார்தது ரொம்ப ரொம்ப அனுபவித் தவா. அநத அனுபவத்தை வெளியிடுவதறகுப பிரம்மன, மயன முதலிய மானசமான பாத்திரஙகளைக கொண்டு வருகிறார். கவிஞருடைய கணணோடு நாமும் புதிபபிதத இலங்கை நகரைப் பார்த்து அதிசயிகக வேணடும.

ராவணன் வந்து பார்த்தான், ஒரே எக்களிப்பு உண்டாயிற்று அவனுக்கு. வானத்தை நோக்கினன் — அங்கேதான் இப்படி உண்டா என்று கேள்வி கேட்கும் பாவனையில்.

பொன்னினும மணியினும
அமைந்த பொறபுடை

நனனகா நோக்கினை;
நாகம நோககினை;

முனனையின அழகுடைத்(து)
எனறு, மொயகழல்

மனனனும உவநதுதன
முனிவு மாறினை (111)

2. பொறபுடை நன நகா நோக்கினை – அழகு வாயநத இலஙகை நகரை ராவணன ஒரு பார்வை பார்ததான். நாகம நோக்கினை – அபபடியே ஏறிட்டு விணணையும் பார்த்தான, வானுலகததிலும இபபடி உணடா எனறு பொருள் பட மொய கழல மனனனும் – கால நிறைநத கழல அணிநத ராவணனும் உவநது தன முனிவு மாறினை – எனறும் இலலாத சநதோஷம உணடாய, அநத சநதோஷத்தினல் நகரை அழித்த குரஙகின மேல உணடான கோபம் கூட மறநது விட்டது

குறிபபு சிறபக்கலை முதலான பணபாடுகளில ராவணன எவவளவு உயர்நதிருநதான, (சஙகீததததிலும் சமயததிலும் உயாநதிருந்தது போலவே) எனபதைக் கம்பர் விளககுகிருர்.

3 பட்டணத்தின் அமைப்பைப் பார்த்து அதிச யித்தான், ராவணன். பிறகு உள்ளேயும் போய்ச் சுற்றிப்பார்க்கிறான். பாரதத்தின் சிற்பத்தின் அதி தேவதையான பிரம்மனுக்கு வழிபாடுகள் செய்யும் படி தெய்வத் தச்சனிடம் சொல்லுகிறான்

திருநகர் முழுவதும்
திருந்த நோக்கிய

பொருகழல் இராவணன்,
'அயற்குப் பூசனை

வரன்முறை இயற்றி நீ
வழிக்கொள்வாய்' என்றான்,

அரியன தச்சற்கும்
உதவி ஆணையால் (112)

3 பொரு கழல் இராவணன் – போரின் வெற்றிக்கான கழல் அணிந்த ராவணன் அயற்குப் பூசனை - பிரம்மனுக்குப் பூஜைகள். வரன்முறை இயற்றி – பூர்வமாக ஏற்பட்ட விதிப் படி செய்து. வழிக்கொள்வாய் என்றான் - அருளைப் பெறுவா யாக என்றான் அரியன தச்சற்கும் உதவி ஆணையால் - மந்திரி மார்களுக்குக் கட்டளை இட்டு அவர்கள் மூலமாக அரிய பரிசு களை — பீதாம்பரங்கள், சால்வைகள், பொற் கலசங்கள் ரத்தின ஆரங்கள் முதலிய பரிசுகளைத் — தேவ தச்சனுக்குக் கொடுக்கும்படி செய்தான்.

குறிப்பு யுத்தம், அதிகாரம் முதலிய தோரணை இருந்த போதிலும் ராவணன் பக்தி சாதனங்களில் ஈடு பட்டிருந்தான் என்பதைச் செய்யுள் விளக்குகிறது. 'பொரு கழல் இராவணன்' என்ற வார்த்தையில் வீரதோரணை நன்கு தொனிக்கிறது

## ஈ எறும்பு வரக்கூடாது உள்ளே !

4 அனுமனால் எரியுண்ட இலங்காபுரி தேவ தச்சன் மயனால் அற்புதமாயப் புதுப்பிக்கப்பட்டது. ராவணனும் அதை வியந்து பாராட்டினான்.

தச்சனுக்கு மரியாதையெல்லாம் செயத பிறகு, புதிதாகக் கட்டபபட்ட சபா மண்டபத்திற்குப் போகிறான ராவணன்.

மண்டபததில் என்ன பார்க்கிறோம்? ஆயிரமோ அதற்கு மேலோ எனறு சொல்லும்படி வரிசை வரிசையாகத தூணகள் நிற்கின்றன.

பதித்த ரததினஙகளும், இழைத்த பொன்னும் தூணகளிலிருந்து பிரகாசததை வீசுகின்றன மண்டபததைப பாாததால் அதன அழகு (–எவ்எழில்) யாரையும் திகைக்கச செயயும்

அந்த மணடபததில் ஒரு கோடியில் ஒரு ஆசனம் இருக்கிறது ஆசனததைத தாங்கியுள்ள சிம்மஙகள் அறபுதமான பயஙகர பாவம் கொணடவைகளாய இருக்கினறன அந்த பயஙகர பாவததின் (–வெவ் எழில்) அருமையைப பாாததுக்கொணடே இருக்க லாம் நாம்.

அவவழி ஆயிரம
ஆயி ரமஅவிா

செவ்வழிச செமமணித
தூணம சோததிய

4. அவவழி - மயனுக்குப பரிசு கொடுத்தான பிறகு. ஆயிரம ஆயிரம் – ஆயிரமோ இரணடாயிரமோ எனறு எணணிச சொலல முடியாத அததனை மிகுதியான. அவிர் செவவழிச் செமமணித தூணம சேர்ததிய – ஒளி வீசும்படியான நோ ஒழுஙகில அமைதத ரத்ன கசிதமான தூணகள நிறுததிய.

எவ்எழில் மண்டபத்(து),
அரிகள் ஏந்திய

வெவ்எழில் ஆசனத்(து)
இனிது மேவினான். (113)

5, ராவணன் ஏறியிருந்த சிம்மாசனத்தைச் சுற்றி, உறவினர்கள் எத்தனையோ பேர், ராஜ தந்திரங்களில் நிபுணரானவர்கள் எத்தனையோ பேர் சிறிது எட்டிச் சூழ்ந்து நிற்கிறார்கள்.

வரம்பறு சுற்றமும,
மந்திரத்தொழில

நிரம்பிய முதிஞரும,
சேனை நீளகடலத்

4. எவஎழில மணடபதது - அதிசயங காரணமாகத் திகைப்படையக் கூடிய அழகுவாயநத மணடபததில். அரிகள ஏநதிய - சிம்ம உருவஙகளினமேல அமைத்த. வெவ் எழில ஆசனத்து - பயஙகரமான ஒரு அழகு (—கலைததிறம்) படைதத சிம்மாசனததில. இனிது மேவினன - உறசாகமாகப் போய உட்காாநதான.

குறிபபு ஓவியக் கலையின பல அம்சஙகளையும் அனுபவிததவர் கமபா எனபது 'வெவ எழில' எனற பிரயோகத்திலிருநது தெரிய வருகிறது.

5. வரம்பு அறு சுற்றம - பல வகையிலும நெருஙகிய சுறறததாாகள் மநதிரத தொழில நிரம்பிய முதிஞர் - ஆலோசனை செய்வதில திறமை உளள முதியோர். சேனை நீளகடல - விசாலமான கடலபோனற சேனைக்குறிப.

தரம்பெறு தலைவரும்,
தழுவத் தோனறினை—

அரமபையர் கவரியோ(டு)
ஆடும தாரினை. (114)

6. குடும்பத் தலைவர்களா, பேரறிஞர்கள், பலரும் மண்டபததில் இருந்தாாகள். அவர்களை எல்லாம் அவரவர்கள் வீட்டிற்குப் போகலாம் எனறு ராவணன சொல்லச சொனனன.

முனைவரும தேவரும்
மறறு முறறுளளோர்

எனைவரும தவிாகென
ஏய ஆணையான,

தரம்பெறுதலைவர் – உயாநத பதவிகளுடைய தலைவாகள். தழுவத தோனறினை - சுறறி நிறகும நிலையிலத தோன்றினை, யார்? அரமபையா கவரியோடு ஆடும் தாரினை - அபூாவமான அழகு வாய்நத பெணகள இரு பக்கததிலும் இருநது கவரி வீச, அநதக் கவரியின அசைவோடு அலைந் தாடும மெனமையான ரததின ஆரஙகளை அணிநத— ராவணன

குறிப்பு உலலாசமான அலங்கார வாழக்கை ராவணனுககு இயல்பாய உரியது அநத அலஙகார தோரணையிலேயே சபாமணடபத்திறகு வநதான எனபதை அழுததமாயக கூறுகிறது கடைசி அடி.

6. முனைவரும் - குடும்பத தலைவர்களும். தேவரும - பேரறிஞர்களும். முற்றுளளோர் எனைவரும் – சுறறி இருந் தவாகளான எல்லோரும். தவிர்க என ஏய ஆணையான் – அகலவேண்டும் என்று அதிகாரிகளைக் கொண்டு சொல்லிக் கட்டளையிட்டான்.

புனைகுழல மகளிரோ(டு)
இளைஞாப போக்கினை,—

நினைவுறு காரியம
நிகழத்தும நெஞசினை. (115)

7 முககியமான காரியம் ஒன்றை எடுததுப் பேசி முடிவு செயய வேணடியதிருககிறது அது மிகவும் ரகசியமான காரியம் அதற்காக அரசியல நிபுணர்கள், தனனுடன நெடுநாளாகப பழகினவா கள, அனுபவ முதிாசசி உடையவாகள, அமைதியும் நிதானமும் கொணடவாகள், மாறுபாடு இல்லாமல் அனுதாபம் உளள தலைவாகளான மநதிரிகள் எல்லாரையும் பக்கததில் வநது இருககும்படியாகச் சொலலி அவாகள் மததியில் தானும் இருந்து கொணடான்.

வேறு யாரும் குஞ்சு குறுவான் கூட சபா மணடபததுககுள வராதபடி கணடிபபாய ஏற்பாடு செயதுவிட்டான்.

பணடிதா பழையவா
கிழவா பணபினா

தணடலஇல மநதிரத
தலைவா சாாகெனக

6 புனை குழல மகளிரோடு இளைஞாப போக்கினை — உறவினரான பெணகளையும் இளைஞாகளையும அவனே இதமாகச சொலலி வீட்டிறகுப போகச செயதான. புனை குழல — அழகாயச சடை பினனிய கூநதலை உடைய. எதறகாக இதெலலாம செயதான? நினைவுறு காரியம நிகழத்தும நெஞசினை — மனசில நினைதத ஒரு பெரிய காரியததை மநதிரிமார்களுக்குச சொலல எணணியவனாய.

7. பண்டிதா — அரசியல, போர் முதலிய விஷயங் களை நனகு கறறவர். பழையவர் — நெடுநாள தனனுடன நெருஙகிப பழகியவர். கிழவர் — அனுபவம் முதிாநது வயசானவா பண்பினா — எதையும் ஆற அமர யோசிததுச

கொண்டுடன இருந்தனன; —
கொற்ற ஆணையால்

வண்டொடு காலையும
வரவு மாற்றினை! (116)

செயயும் இயலபினா. தணடல இல மநதிரத தலைவர் — மாறுபாடு இலலாத அனுதாபங கொணட முதனமையான மநதிரிகள சார்கெனக் கொணடுஉடன இருநதனன — பக்கத்தில உட்காரச செயது, அவர்களுடன ஒருவனுயத் தானும் அமாநதான கொற்ற ஆணையால — அதிகார தோரணை யோடு வணடொடு காலையும வரவு மாற்றினை — வணடுகளை யும காற்றையுமே உளளே வரவிடக கூடாது எனறு சொலலி வைததான.

குறிபபு வணடும் காற்றும வரககூடாது எனறு சொலலிக கட்டளை யிட்டான எனபதில ஒரு ஹாஸயம். தமாஷாகததானே அபபடியெலலாம பேசுகிறுன ராவணன எனபது விஷயம். மாயையில வலலவாகள அரககாகள, வணடாகவும் காற்ருகவுமே உரு மாறி உளளே புகுநது விடுவாாகள எனறு வியாக்கியானம செய்வது வேணடாத காரியம.

## சிம்மாசனம் வேறு கேடா!

8. ராவணன் சிம்மாசனத்தில் இருந்து கொணடு சபையோரைப் பார்த்துப் பேசுகிற சந்தாப்பம்

ஜனங்கள் எல்லோருக்கும் ராவணனுடைய சக்தி இன்னதென்று தெரியும். அவனுடைய சேனை பலம் இன்னதென்பதும் தெரியும். யாரையும் அவன் பொருட்படுத்த வேண்டியதில்லை. அபபடி யிருந்தும் என்றும் இல்லாத கிலேசததுக்கு உள்ளாகி ஆலோசனையில் ஆழ்ந்திருககிறுன் என்பதையும் கண்டு கொண்டாாகள்

ஜனஙகளுக்குப பயம் உண்டாகி விட்டது ஒரு வாாதநதை கூடப பேசாமல் ஆங்காங்கு மௌனமாய இருந்துவிடடாாகள—அவ்வளவு பயம்!

திசைதொறும நிறுவினன
உலகு சேரினும

பிசைதொழில் மறவரைய,
பிறிதென பேசுவ,—

8 திசைதொறும நிறுவினன — தனனுடைய ராஜயத தில எலலா எல்லைப் புறங்களிலும் ஸதிரமாக அமைதது வைத்திருநதான,— என்னத்தை? உலகு சேரினும், பிசை தொழில மறவரை — உலகத்தார் எலலாரும் சேர்நது எதிர்த்த போதிலும் அவர்களை யெல்லாம் நிர்மூலமாக்கும் வீரர்களால் ஆகிய படைகளைத (திசைதொறும் நிறுவினன்). பிறிது என் பேசுவ — அவன் சக்தி அந்தவிதமாய இருக்க வேறு என்ன சொல்லவேணடியதிருக்கிறது? .

விசையுறு பறவையும்
விலங்கும் வேற்றவும்

அசைதொழில் அஞ்சின—
சித்தி ரத்தினே! (117)

9. இனி, சபா மண்டபத்துக்குள் வேலை ஆரம்பமாகிறது, ராவணன் பேசுகிறான். எவ்வளவோ மனம் கசந்தவனாய்ப் பேசுகிறான்

8. விசையுறு பறவையும விலங்கும வேறறவும் - வேகமாயப் பறககும பக்ஷிகளும, ஆடு மாடு, யானை முதலிய மிருகஙகளும், தென்னை கமுகு போனற மரஙகளும். அசை தொழில அஞ்சின - அசையாமல அபபடியே ஒடுஙகி நினறுவிட்டன. சித்திரததினே – சித்திரஙகள பயத்தினால அசைவறறு ஒடுஙகி நிறபதாகத தோனறின – அவைகளை ஒததே மேலே சொனனவைகளும் அசைவறறு நினறன.

குறிப்பு. ஆலோசனைக்காக ராவணன செய்த ஏறபாட்டைப பார்த்து ஜனங்கள் திகில் அடைநது விட்டார்கள். அநதத் திகிலை (மக்களைத தவிர்த்து விட்டு) பறவை விலங்குகளை வைத்துக் காட்டுவதால அபூர்வமான பாவம் உண்டாய் விடுகிறது.

'இதைவிடக் கேவலமான காரியம் எனக்கு இனி நேருவதற்கில்லை. இந்த நிலையில் எனக்குக் கௌரவம் (-மாட்சி) என்னென்று இருக்கவா செய்கிறது?''

'தாழ்ச்சிஇங்(கு) இதனின்மேலத்
தருவ(து) என்?
மாட்சிஓர் குரங்கினால்
அழிந்து மாண்டதால்,—
ஆட்சியும் அமைவும்என்
அரசும் நன்(று)'என்ச,
சூழ்ச்சியின் கிழவரை
நோக்கிச் சொல்லினான் (118)

9 தாழ்ச்சி இங்கு இதனின் மேலத் தருவது என் – இதைவிட அவமானம் ஒன்றை எனக்குக் கொடுப்பதற்கு வேறு என்ன இருக்கிறது மாட்சி ஓர் குரங்கினால் அழிந்து மாண்டதால் – என்னுடைய பெருமையும் புகழும் ஒரு குரங்கினால் அழிந்தது — போயேபோய்விட்டது திரும்பி வராது— இந்த நிலையில். ஆட்சியும் அமைவும் - பிரஜைகளை ஆளகிறது என்றும், அமைதி நிர்வாகம் எல்லாம் ஒழுங்காய் நடக்கிறது என்றும் — அமைதியாய் இருக்கிற நிலைமை. என் அரசும் – ராஜாதி ராஜனாய் வீற்றிருக்கும் பவிசும். நன்றென்ச - ரொம்ப அழகாய் இருக்கிறது என்று. சூழ்ச்சியின் கிழவரை நோக்கிச் சொல்லினான் – யோசனை செய்யக் கூடிய நிபுணர்களைப் பார்த்துச் சொன்னான்

குறிப்பு ராவணன் மனசில் உண்டான கசப்பு எவ்வளவு கஷ்டத்துடன் வெளி வருகிறது என்பதைச் செய்யுளின் உருவம் காட்டுகிறது.

10. ராவணனது மனசில் அவமானத்தோடு சோகமும் வந்து தாக்குகிறது.

'மனுஷன் என்று சொல்லக் கூடாத ஒருவன், குரங்கென்று தான் அவனைச் சொல்லவேண்டும். அந்தக் குரங்கு ஏதோ ஒரு இடத்தில் தீயை வைத்தது. அந்த நெருப்பானது நாலா பக்கமும் பரவியது. நகரம் தொலைந்தது.'

'சுட்டது குரங்(கு), எரி
சூறை ஆடிடக்

கெட்டது கடிநகர்,
கிளையும் நண்பரும்

பட்டனர், பரிபவம்
பரந்த(து) எங்கணும்,—

இட்டஇவ் அரியணை
இருந்த(து) என்னுடல்!' (119)

---

10. எரி சூறை ஆடிட – நெருப்பானது நகரம் முழுவதையும் வளைத்து எரிக்கவும் கெட்டது கடி நகர் – நன்றாய்ப் பாதுகாக்கப்பட்ட இந்த இலங்கை நகரம் தகர்ந்து போய் விட்டது பரிபவம் பரந்தது எங்கணும் – எங்கே பார்த்தாலும் துயரந்தான் இட்ட இவ் அரியணை – அழகாக அமைத்து வைத்திருக்கிற இந்த சிம்மாசனத்தில் இருந்தது என் உடல் – உயிரற்ற நிலையிலேதான் இருக்கிறது என் உடல்

குறிப்பு: 'நாடு நகரம் எல்லாம் அழிந்துபோன பிறகு நான் ஒரு ராஜாவா! சிம்மாசனம் என்பதும் வேண்டுமா எனக்கு?' என்பது பாவம்.

## அறிவு கைவிட்டது உன்னை

11. ராவணன் மந்திரிகள் முதலியோர் கூடிய சபையில் இருக்கிறான்.

அவமானமும் ஆங்காரமும் அவனது மனசை வந்து தாக்குகின்றன.

'கிணறுகளில் தண்ணீரா ஊறுகிறது, இரத்தம் அல்லவா ஊறுகிறது பூந்தோட்டங்களும் பூஞ் சோலைகளும், தண்ணீர்த் தடாகங்களும் பல இடங் களிலும் இருந்தன. அப்படி அழகினாலும் தன்மை யாலும் சிறந்திருந்த நகர் இப்போது எப்படி இருக் கிறது. ஒரே கொதிப்பாய்க் கொதிக்க அல்லவா செய்கிறது

'பெண்களின் கூந்தலிலிருந்து அகில்ப் புகையின் மணமும், கஸ்தூரித் தைலத்தின் மணமும் வருமே. அப்படி வரும்போது பெண்கள் வருகிறார்கள் என்று கட்டியம் கூறுவது போல் இருக்குமே. இப்போதோ–'

'ஊறுகின் றனகிண(று)
உதிரம்; ஊர்நகர்
ஆறுகின் றில(து)அனல்,
அகிலும் நாவியும்

11. அகிலும் நாவியும் கூறும் - அகில்ப் புகையும் கஸ்தூரி வாசனையும் வெகு தூரத்துக்கு வந்து வீசி மங்கையர் வருவதை எடுத்துக் கூறும்.

கூறுமங் கையர்நறும்
கூந்த லினசுறு
நாறுகின றது,நுகர்ந்(து)
இருந்தம் நாமெலாம்.' (120)

12. ராவணன் மேலும் பேசுகிறுன்.

'பகைவர்களைத்தான் நாம் ஒன்றும் செய்ய முடிய வில்லை, போகட்டும். இந்தக் குரங்காவது செத்தது, இப்போது அது இல்லைதான் என்கிற வார்த்தை யாவது நம்மால் ஏற்பட்டதா? இல்லை.'

'மறறில தாயினும
மலைந்த வானரம
இற(று)இல தாகிய(து)
எனனும வார்த்தையும

11 நறும கூநதலின சுறு நாறு கினறது - அததகைய வாசமுளள கூநதலிலிருநது இபபோது நெருப்புப பட்ட காரணததினுல துர் நாறறம் அலலவா வீசுகிறது நுகர்ந்து இருந்தம நாமெலாம - பரிமளம போல அலலவா அநதத் துர்நாறறததை அனுபவிததுக கொணடிருககிறேம், நாம் எலலாம்

குறிபபு கிணறறில இரததம் பெருகியது முதலான காரியஙகள் எலலாம் வெகு நாளைககு முன கணடவைகள் தான. ஆனுலும் ராவணனது மனசை விட்டுப போகவிலலை. அவமானமும ஆஙகாரமும் மனசுககு வநத போது கிணறறி லுளள இரத்தம நகரததின கொதிபபு எலலாம அப்படி அபபடியே புலனுக்கு வருகினறன

'நனருய உட்கொளளுகிறேம், அனுபவிக்கிறேம் நாமெல்லாம்' எனபதில ஆஙகாரத்தின பாவம் வேகததோடு தொனிக்கிறது.

12. மலைந்த வானரம் - நம்மை எதிர்தத குரங்கு (-அனுமன்). இற்று இலதாகியது - இறநது இலலை எனறு ஆயது .

பெறறிலம ; இறநதிலம்
எனனும் பேறலாஸ்

முறறுவ தெனஇனிப ;—
பழியின மூழகினும!' (121)

13. என்றும் மறக்கமுடியாதபடி அவமானம் ஏற்பட்டு விட்டது ராவணனுக்கு, மனம் தளர்ந்து விட்டது. செயலற்ற நிலைக்கு வந்துவிட்டான்,

இதைச சேனைத தலைவனாகிய பிரஹஸ்தன் என்பவன் பார்ததான் இபபடிச சோர்வடைந்து செயல் செயயாமல் இருக்கும் நிலைமை ஆபததை உண்டாக்கிவிடும் எனறு பயநதுபேச ஆரம்பிக்கிறான.

எனறவன இயமபலும,—
எழுநதி றைஞசினன

கனறிய கருஙகழலச
சேனை காவலன—

12 பெறறிலம் - நாம அடையவிலலை இறநதிலம எனனும பேறு அலலால - இறநது ஒழிய விலலை எனனும பாககியம் (-புகழ) அலலாமல. முற்றுவ தென இனி - இனி எனன நேரப போகிறதோ சொலல முடியாது. பழியின மூழகினும் - தீராப பழிககு உளளாகிவிட்டோம் இனி ஏது விமோசனம!

13 எனறவன இயமபலும - மேலே சொனனபடி ராவணன பேசி முடிககவும் எழுநது இறைஞ்சினன - எழுநது நினறு வணஙகியவனாய் கனறிய-மனம் நொநத. கருங்கழலச சேனை காவலன - இரும்புக கழலைக காலில அணிநத சேனைத் தலைவன-பிரஹஸதன.

'ஒனறுள(து) உணர்த்துவென்
ஒருஙகு கேள' என்று,

நிலறனன நிகழ்த்தினன
உறுததும நெஞசினன (122)

14 'நாம் எந்தக் காரியத்தையும் நோமுகமாய் வீர தத்துவத்துக்கு ஒததவாறுகச செயய வேண்டும். அதை விட்டு விட்டு சாமானியப பட்ட மனிதாகளை ஏமாறறுகிறதும, அவாகளுடைய பெணகளைக் கள்ளததனமாயப பிடிததுக் கொண்டு வருவதும், கோழைகள் செயகிற காரியம் என்று முன்னமே சொன்னேன. அது தஙகளுக்கு ஞாபகம் இருக்கிறதா?'

'வஞசனை மனிசரை
இயறறி, வாளுதல

பஞசன மெலலடி
மயிலைப பறறுதல,

13 ஒனறு உளது உணாததுவென - ஒரு விஷயம் இருககிறது அதை நான சொலலுகிறேன. ஒருங்கு கேள என்று நினறனன - ஒதத மனததவனாய நீ கேடக வேணடும் எனறு சொலலி நினறவனாய நிகழததினன - பேச ஆரமபித்தான. உறுததும நெஞசினன - ராவணன் மனசிலப் படுமபடியாகச சொலல வேணடும் எனறு நினைததவனாய.

14 மனிசரை வஞசனை இயற்றி - சாமானியபபடட மனிதர்களை ஏதோ பொலலாதவாகள எனறு எணணி அவாகளை ஏமாறறுவதும வாளநுதல பஞசு அனன மெலலடி மயிலைப பற்றுதல - பிரகாசமான நெறறியாம்! பஞ்சுபோனற பாதமாம்! மயில போனற அழகாம்! எனறெலலாம எணணி எணணி ஒரு பெணணைக் கள்ளத் தனமாகப பிடித்து வருவதும்.

அஞ்சினர் தொழில்என
அறிவித் தேன் அது
தஞ்சென உணர்ந்திலை—
உணருந் தனமையோய்!' (123)

14 அஞசினர் தொழில என - கோழைகள செயகிற காரியம் எனறு. அறிவித்தேன - எடுததுச சொனனதில குறைவிலலை. அது தஞ்செனா உணர்ந்திலை - அதுதான கைக் கொள்ள வேணடிய காரியம் என்று நீ உணரவிலலை — (தஞ்சு-பறறுக கோடு) விதியின செயலதான என்ன! உணரும் தன்மையோய் - சகல காரியங்களையும் கறறு உணரக்கூடியவன தானே நீ

குறிப்பு. உணரக் கூடியவனுய இருநதும் உணராது போனது விதியின் செயல்தான எனபதில அருமையான பரிவு தொனிககிறது.

## யாராவது மிஞ்சினார்களா!

15. பிரஹஸ்தன் என்பவன் ராவணனது சேனைத் தலைவன். ராவணனைப் போலவே அவனையும் அவமானமும் கோபமும் மனசைப் பிடுங்கித் தின்கின்றன. அவன் பேசுகிறான்

'அந்த மனிதர்கள் ஒன்றுக்கும் உதவாதவர்கள். கரன் முதலியவர்களை எப்படியோ கள்ளத்தனமாகக் கொன்று விட்டார்கள். இப்போதே போய் அவர் களைத் தீர்த்துவிட வேண்டாமா?'

'கரன்முதல வீரரைக்
கொன்ற களவரை,

விரிகுழல உங்கைமூக(கு)
அரிந்த வீரரை,

பரிபவம் செய்ஞ்ஞரைப்
படுக்க லாது நீ

அரசியல அழிந்ததென(று)
அயர்தி போலுமால'   (124)

15 விரிகுழல உங்கை – விரிந்த கூந்தலோடு ஓடிவந்த உன் தங்கை சூர்ப்பணகையின் மூக்கு அரிந்த வீரரை – மூக்கை அரிந்த அந்தப் பொல்லாத வீரரை (—வீரரை: ஏளன வார்த்தை, கோழைகள் என்பது பொருள்.) பரிபவம் செய்ஞ்ஞரை – துயரத்தையெல்லாம் உண்டாக்கின வரை படுக்கலாது நீ – கொன்றுவிடாமல் ஏக சக்ராதி பதியாகிய நீ. அரசியல அழிந்தது என்று – ஏதோ அரசாட் சியே பிடுங்கிக் கொண்டார்கள் என்பதாக. அயர்தி போலுமால – வேண்டாதபடி திகைப்புக்கு உள்ளாகிறாயே!

16. 'யுத்தம் செய்து அதனால் உண்டான வெற்றி காரணமாக அல்லவா மூன்று உலகுக்கும் அதிபதியாக இருக்கிறாய் நீ'

'செற்றனர் எதிரெழுந்
தேவர் தானவர்

கொற்றமும் வீரமும்
வலியும் கூட்டற

முற்றிமூன் றுலகினு நீ
முதல்வன் ஆயது—

வெற்றியோ பொறைகொலோ
விளம்பல் வேண்டுமால்'. (125)

16. செற்றனர் எதிரெழும் - எதிர்ப்பவர்களாய ஒன்று சேர்ந்து போர்முனையில் எழும் தேவர் தானவர் - மிகப் பலசாலிகளான தேவர்கள் தானவர்கள். இவர்களது கொற்றமும் வீரமும் வலியும் - வெற்றிகளென்ன, வீரம் என்ன, பலம்தான் என்ன. கூட்டற முற்றி-எல்லாவற்றையும் ஒன்றும் இல்லாமல் தீர்த்து விட்டு. மூன்று உலகின் முதல்வன் ஆயது - வானலோகம், பூலோகம், பாதாள லோகம் ஆகிய மூன்று உலகங்களுக்குமே அதிபதி ஆனாய அல்லவா, அப்படி ஆனது வெற்றியோ - போர் செய்து வெற்றியால் ஆனதோ. பொறை கொலோ - பொறுமை யாய் இருந்துதான் ஆயதோ. விளம்பல் வேண்டுமால் - கொஞ்சம் தயவுசெய்து சொல்லேன் பார்க்கலாம்!

17 'நாம் என்ன செய்திருக்க வேண்டும். ஓடிப்போன குரங்கைத் தொடர்ந்து போய் இருக்க வேண்டும் குரங்கை ஏவிய அந்த மனிதர்களையும் கொன்றிருக்க வேண்டும். அப்படிச் செயது நம்முடைய துனபத்தைத் தீர்த்திருக்க வேண்டும். அப்படி ஒன்றும் செய்யவில்லை நாம்.'

'போயின குரங்கினைத்
தொடாந்து போய்,அதை

ஏயினர் உயிாகுடித்(து),
எவ்வந் தீாகலம;—

வாயினும மனத்தினும
வெறுத்து வாழதுமேல

ஓயுமநம வலி'என
உணரக கூறினை, (126)

17. ஏயினா - ஏவினவாகளுடைய. உயிாகுடிதது - உயிரை நீக்கி எவவம தீர்கலம் - துன்பத்தை நீககிக கொள்ள முயலவிலலை வாயினும மனத்தினும் வெறுத்து வாழ்து மேல - அந்த மனிதர்களை வாயினல வைது மனதினல வெறுத்துச செயல ஒனறும் செயயாமல பொழுது போக்கிக கொணடிருபபோமாளுல ஓயும் நம் வலியென - நமது சகதி எல்லாம் இலலாமலே போய்விடும் எனறு உணரக் கூறினை - ராவணன மனசில நன்ருயப் படும்படி பேசினை.

குறிப்பு அரககாகளுககுச் சேனைத் தலைவன பிரஹஸதன். ராவணனுககு வநத அவமானததைத் தாங்க முடியவிலலை அவனுககு. யுத்ததததுக்கான வேலை செயயாது சும்மா இருபபது பெருங கேட்டை விளைவிக்கும் என்று பயப்படுகிறன அநத பயததினல ராவணன மேல் கோபமே வருகிறது

18. பிரஹஸ்தன் சொல்ல வேண்டியதைச் சொல்லி முடித்தான். அவனுக்குப் பின் மகோதரன் பேச ஆரம்பித்தான். பிரஹஸ்தனை ஆமோதித்த முறையில்தான் அவனும் பேசுகிறான்.

மற்றவன் பின்னுற
மகோத ரப்பெயர்,
கற்றடந் தோளினன்
எரியுங் கண்ணினன் -
முற்றுற நோக்கினன்,
'முடிவும் அன்னதால்
கொற்றவ கேள்' என
இனைய கூறினன் (127)

18 மற்றவன் பின்னுற — பேசிய பின் பிரஹஸ்தனைத் தொடர்ந்த மாதிரியே. மகோதரப் பெயர் — மகோதரன் என்னும் பெயரைக் கொண்டவன் கற்றடந் தோளினன் — மலைபோன்ற தோளை உடையவன் எரியுங் கண்ணினன் — வீரா வேசத்தோடு சிவந்த கண்ணினனுய முற்றுற நோக்கினன் - சென்ற காரியம் வரும் காரியம் எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்தவனுப முடிவும் அன்னதால் — பிரஹஸ்தன் சொன்னது சரிதான் அப்படித்தான் நடக்க வேண்டும். கொற்றவ கேள் என - வீர பராக்கிரமங் கொண்ட ராவணனே நான் சொல்லப் போவதைக் கேட்கவேண்டும் என்று. இனைய கூறினன் - பின் வருபவற்றைக் கூறினன்.

19. 'ராவணேசுவரனே! உன்னுடைய பராக்கிரமததை எளிதில் கணித்துவிட முடியுமா? தேவர்கள் என்றும், யக்ஷர் என்றும் தானவர் என்றும் மிக்க வலிமை பெற்றவர்கள் இருக்கிறார்கள். அவர்கள எல்லோரும் உனக்குத தோற்றுப் போனவாகள தானே?'

'தேவரு மடங்கினா,
இயககா சிந்தினா,

தாவருந தானவர்
தருககுத தாழநதனா,

யாவருட இறைவரெனை(று)
இறைஞசு மேனமையா

மூவரும ஒதுஙகினா
உனககு மொயமபினேய!' (128)

19. தேவரும மடஙகினா-மகா பலசாலிகளான தேவாகள எனறு சொலலப பட்டவாகள எதிா நிறகமுடியாமல புறஙகாட்டி ஓடினார்கள இயக்கா சிநதினர்-யக்ஷர் எனபவர் சிதறுணடு போனாகள. தாவரும தானவா-வெலல முடியாத தானவாகளும் தருக்குத தாழநதனா - வீரததால ஆகிய மேமபாடு இழநதவாகள ஆனாகள யாவரும இறைவரெனறு இறைஞசும மேனமையா மூவரும-எலலாரும் கடவுள எனறு வழிபடும உயரநதோரான பிரமமா, விஷ்ணு, சிவன ஆகிய மும்மூாத்திகளுமே ஒதுஙகினா உனககு - உனமுன நிறகமுடியாது ஓடிபபோய விட்டாாகள எனறு சொலல வேணடும் மொயமபினேய-யாராலும அசைகக முடியாத வலிமை உடைய ராவணனே!

குறிபபு மூவரும் ஒதுஙகினர் எனறலலவா வாாததை வருகிறது அபபடி வருமபோதுதான வீர வெறியின உணமையான தொனி கேட்கிறது.

## என்னை ஏன் விடவில்லை போருக்கு?

20. மனத தளாச்சி ராவணனுக்கு உண்டாகி விடக்கூடாது என்று அவனைப பாாதது மகோதரன், 'தேவா மாததிரமா? மூவருமே நமக்குத தோற்று ஓடினவாகள தானே' என்று, ஆவேசததோடு பேசினுன்

மேலும் சொல்லுகிறுன

'உன்னைபபறறிததான் பாடுகிறுர்களே கவிஞா கள— கைலயஙகிரியைச் சிவபெருமான உடனேயே அஸதிவாரததோடு பெயாததுச செந்தூக்காயத தூக்கிய வீரன எனபதாகப பாடுகிறுாகளே!'

'வெள்ளியங கிரியினை
    விடையின பாகனோ(டு)
அள்ளினை தொடஎடுத்(து)
    ஆர்த்த ஆறறலாய,
சுள்ளியில இருந்துறை
    குரஙகின தோளவலிக்(கு)
எளளுதி போலுமநின
    புயததைத,— எமமொடும' (129)

20 வெள்ளியங கிரியினை - கைலயஙகிரியை. விடையின பாகனோடு — ரிஷபத்தை வாகனமாக உடைய சிவபெருமானோடு (பாகன வாகனத்தில ஏறிச செலுததுபவன). அள்ளி - அஸதிவாரததோடு, மணனோடு மணணையப பெயர்தது. விணதொட எடுதது ஆர்த்த ஆற்றலாய் — விணணையே தொடும்படியாகத தூககி அட்டகாசம் செய்தாய் என்று புகழுமபடியாகச சக்தி வாயநதவனே சுள்ளியில இருநதுறை — உலர்நது ஒடியக்கூடிய சிறு மரக குச்சியிலேயே இருநது வாழும் குரங்கின தோள வலிக்கு — அறபக் குரஙகொனறின தோள பலத்திறகு எதிராக வைத்து. எளளுதி - இகழ அலலவா செயகிறுய். நின் புயத்தை — உனனுடைய தோள் வலியை. எம்மொடும் — எங்களையும் சேர்த்துத்தான் இகழுகிறுய்.

21. 'ஏதோ கஷ்டம் இருக்கிறதாய்ச சொல்லு கிருய். இபபோது என்னைக் கொஞ்சம் விட்டுப்பார்.'

'இடுககினி இயம்புவ(து)
என்னை? ஈணடென

விடுககுவை யாமெனிலக
குரஙகை வேரறுத(து)

ஒடுககரும மனிதரை
உயிருண(டு), உனபகை

முடிககுவன யான'என
முடியக கூறினன (130)

21 இடுக்கினி இயமபுவது என்னை - இநதச சநதரப் பத்தில ஏதோ இடைஞசல இருககிறதாக எணணி அதை எடுத்துச சொலலுவது எநதவகையிலப பொருநதும ஈண்டு என்ன விடுக்குவையாமெனில - இபபோதே எனனைப பகைவர்மேலச செலல அனுபபினல குரங்கை வேரறுதது - குரஙகினததை இலலாமல ஆககி ஒடுக்கரும மனிதரை - ஏதோ வெலலமுடியாது எனறு சொலலுகிற அந்த மனிதரை. உயிா உண்டு - கொனறு. உன பகை முடிக்குவன் யான் - உனனுடைய பகையைத் தீாபபேன என முடியக் கூறினன் - என்று சநதேகத்துககு இடமில்லாமல்ச் சொலலித தீர்ததான்.

22. மகோதரனைத் தொடர்ந்து வஜ்ரதந்தன் என்பவன் பேசுகிறான்

'மனிதர்கள், குரங்குகள் என்று வந்திருக்கிறார்களே! அவர்களைத் தரையோடு தரையாய்த் தேய்க்க வேண்டும் என்று சொல்''

'போயின மனிசரைக,
குரஙகைப பூமியிலத

தேயுமின கைகளால,
தினமின, எனறமை

ஏயினை யிருககுவ
தனறி, யெனனினி

ஆயுமி(து)! எமவயின
அயிாபபுண டாஙகொலோ!' (131)

22 போயின மனிசரை – இஙகு வநதிருக்கிறாகளே மனித ஜனமஙகள், அவாகளை குரஙகை – அவாகளோடு வநதிருககிற குரஙகுக கூடடஙகளை பூமியிலத தேயுமின கைகளால – தரையோடு தரையாயக் கைகளாலத தேயததுவிடுஙகள தினமின – தினறு விடுஙகள எனறமை ஏயினை யிருக்குவ தனற–எனறு சொலலி எஙகளை ஏவிவிட்டுச சுமமா இருபபது அலலாமல, எனஇனி ஆயுமிது–என இனிமேலும யோசனை பணணி மனசைப புணணுககிக கொளள வேணடும். எம்வயின அயிாபபு உண்டாஙகொலோ – எஙகளிடததில உனககுச சநதேகம் ஏதேனும் தோனறி விடடதா?

28. 'உலகத்தில் எங்கே இருந்தால்த்தான் என்ன! உன்சொற்படி கேட்டு நடவாத பகைவர்களை, நிர்மூலம் செய்தேன். அந்த விதமாக உனக்கு அடிமைத் தொழில் புரிந்தவன் அல்லவா நான். அப்படி யிருக்கத் தவறின செயல் என்னிடம் ஏதேனும் உண்டென்று சொல்ல முடியுமா? இல்லையே!

'எவ்வுல கத்தும்நின்
ஏவல் கேட்கிலாத்

தெவ்வினை அறுத்(து)உனக்(கு)
அடிமை செய்தயான்,

தவ்வரு பணியுள
தாகத் தான்கொலோ

இவ்வினை என்வயின்
ஈகலா' தென்றான் (132)

28 தெவ்வினை அறுத்து - பகையை இல்லாமலாக்கி, (தெவ்-பகை) உனக்கடிமை செய்த யான்-உனக்கு அடிமைத் தொழில் புரிந்த நான் தவ்வரு பணி - தவறின செயல் உளதாகத் தான்கொலோ-உண்டென்று எண்ணித் தானோ. இவ்வினை என்வயின் - இந்தப் போர்த் தொழிலை என்வயின் ஈகலா தென்றான்-என்னிடம் கொடாமல் இருப்பது என்று மனம் புழுங்கிச் சொன்னான்

குறிப்பு போர் புரிவதற்கு இடமில்லையே என்று புழுங்குகிறது வஜ்ரதந்தனது உள்ளம். வீர தத்துவம் அப்படியெல்லாம் ஆட்டுகிறது உள்ளத்தை.

## செல்ல வேண்டும், அவ்வளவுதான்!

24. ராவணனைப் பார்த்து, 'தேவர்களும் மூவர்களுமே பயந்து ஓடிவிடுவார்கள், வெறும் மனிதர்களைப் பற்றி யோசிக்கவும் வேண்டுமா நீ?' என்பதாகப் பேசிக்கொண்டிருந்த வஜ்ரதந்தனை, 'அப்படியே நில் பேசாதே' என்று விலக்கினுன் துன்முகன் என்பவன். அவன் ராவணனை நோக்கி 'உன்னுடைய வீரச் செயல்களைப் பார்த்துத்தானே இருக்கிறேன். இப்போது என்ன! ஒன்றுக்கும் ஆகாத கோழை போல் உட்கார்ந்திருக்கிருயே' என்று சொல்லி வீராவேசத்துடனே பேசுகிருன்.

'நில நில'என(று) அவனதனை
விலககி;— 'நீயிவண

எனமுனும எளியைபோல
இருநதி யோ'என,

மனமுகம நோககினன,
வணஙகி வனமையால்த்

துனமுகன எனபவன
இனைய சொலலுவான (133)

24 அவனதனை விலக்கி - வஜ்ரதந்தனை விலக்கி. மனமுகம் நோக்கினன் - ராவணனை நோக்கினவனுய. வனமையால - வீராவேசத்தோடு. இனைய சொலலுவான்-கீழே வருவனவற்றைச் சொன்னுன்.

25. துனமுகன சொல்லுகிருன்

'உனனுடைய வீரம் எலலாம் தெரியாதா எங்களுக்கு? எட்டுத் திக்குகளேயும தாஙகிக் கொண்டிருக்கிற யானேகள, உன பலததைப பாாக்கும் போது வலியற்றன என்று தானே சொல்லவேணடும்.

'தேவாகளும் வலியறறவாகள் தான. சிவ பெருமானுடைய கைலேயஙகிரி ஒரு கிடைசசிதானே-' எனபதாக ஆரம்பிக்கிருன

'திககயம வலியில,
தேவா மெலலியா,

முககணுன கயிலேயும
முரணஇன(று) ஆயது,—

மககளும குரஙகுமே
வலிய ஆமளனின

அககட! இராவணற(கு)
அமைநத(து) ஆறறலே!' (134)

25 மக்களும குரங்குமே வலிய ஆமளனில - மககளும் குரஙகும் ஒரு லக்ஷயமா உன வீரததுக்கு. அபபடி லக்ஷயமாய் இருநது விட்டால், அடடா! உன்னுடைய வீரததை என்ன எனறு சொலல. அக்கட - அடடா. ஆற்றலே - வீரம - பொலலாத வீரம் தான்!

குறிப்பு பாராட்டும் இகழ்ச்சியும் கலநது ஒலிககிற பாவம் பாடலில் அழகாய அமைநதிருக்கிறது. அபூர்வமான பாடல். .

26. எரிச்சலும் ஹாஸ்யமும் கலந்த வாருக வார்த்தைகள் வருகின்றன, துன்முகன வாயிலிருந்து

'ஆழ்ந்த யோசனைக்காக மந்திரிமாரகளைக் கூட்டி ஆலோசிக்கும் ராவணனே! நான சொல்லுவதைக் கேள், ஆலோசனை என்ன ஆலோசனை!'

'கண்ணிய மந்திரங்
கருதும காவல!

மண இயல மனிசருங
குரஙகும, மறறவும

உணணிய அமைநத,—
உணவுக(கு) உடகுமேல,

திணணிய அரககரிலத
தீரா யாவரே! (135)

---

26 கணணிய மநதிரம - ஆழநத யோசனைககான இநத மநதிரி சபையை. கருதும காவல - ஏதோ உபயோகமான யோசனை சொலலுவார்கள எனறு எணணுகிற அரசனே மணணியல மனிசரும குரஙகும மறறவும உணணிய அமைந்த - நாம தினபதறகாகத தானே மனிதா, குரஙகு, கரடி முதலான பிராணிகள இநத உலகததில திரிகினறன, உணமை இபபடி இருகக உணவுக்கு உடகுமேல - தின பதறகு அரககா பின வாஙகுவாாகள எனறால திணணிய அரக்கரில - வாட்ட சாடடமாய இருககிற இநத அரக கரைபபோல தீரா யாவரே - தைரியவானகள யார் இருக கிறார்கள உலகததில! சுததக கோழைகள எனபது குறிபபு.

குறிபபு தினனுகிறது எனறால ஏதோ ஆகாரமாக்கிக கொளளுதல எனபதலல பொருள வேரோடு அழித்து விடுதல எனபதுதான விஷயம்

27. 'ஒருவருக்குச் செய்யக்கூடியது இது என்பதாக ஒரு விஷயம் இருக்கும். உறுதியாக சந்தேகத்துக்கு இடம் இல்லாமல் செய்து முடிக்கும் காரியமும் உண்டு. வெற்றியே லக்ஷ்யமாகவும் இருக்கும். தந்திரமான காரியம் என்றும் உண்டு. இவ்வளவும் இப்போது நமக்கு ஒன்றாகத்தான் இருக்கிறது. முதலில், அந்த மனிதர்கள் இருக்கிறார்களே, அந்த இடத்திற்கு நாம் போக வேண்டும்.'

'ஒல்வது நினையினும்
உறுதி ஓரினும்

வெல்வது விரும்பினும்
விளைவு வேண்டினும்—

செல்வதும் அவருழைச்,—
சென்று, தேயத்(து)அறக்

கொல்வதும் கருமமென(று)
உணரக் கூறினன். (136)

27 ஒல்வது - செய்யக் கூடியது இது என்ற நிலையில இருந்தாலும். செல்வதும அவா உழை - பகைவா இருக்கும இடத்திறகுச செல்வதும சென்று தேயதது அறக் கொல வதும் - பின்வாஙகாமல யோசனை பணணமல் அப்படியே போய, மிச்சம் இல்லாமல பகைவாகளை எல்லாம் கொன்று விடுவதும்

குறிப்பு 'உணரக கூறினன' உணமையிலேயே துனமுகனுடைய காரமான ஹாஸ்யஙகள ராவணனது இதயத்தில தாககவே செயகின்றன. பாடலகள அததகைய பாவத்தில் அமைநதிருககின்றன.

## இனி பேச்சு இல்லை!

28. 'உடனே அந்தப் பகைவர் இருக்கிற இடத்துக்கு நடக்க வேண்டும். அப்படியே அவர்களைக் கொல்ல வேண்டும்' என்று பேசி முடித்தான் துன்முகன்.

துன்முகன் பேசி முடித்த மாத்திரத்தில் மா பெரும் பக்ஷன் என்ற வீரன் துன்முகனைப் பார்த்துப் 'பேச்சை நிறுத்து' என்று கையினால் ஜாடை காட்டி விட்டுப் பேச ஆரம்பிக்கிறான். 'இனி நமக்கு கோபமாவது வீரமாவது ஒன்றும் இல்லை'.

காவலன் கண்ணெதிரா
அவனைக் கைகவித்(து),
'யாவதுண் டினிநமக்(கு)'
என்னச் சொல்லினன்
'கோபமும் வன்மையும்
குரங்குக் கே'என்று.
மாபெரும் பக்கன்என(று)
ஒருவன் வன்மையினன். (137)

28 காவலன் கண் எதிர் - ராவணனுக்கு எதிரிலேதானே அவனைக் கைகவித்து-துன்முகனைப் பேச்சை நிறுத்தச் சொல்லி வன்மை-வீரம். குரங்குக்கே என்று - நமக்கில்லைதான் என்று கோபமாயச் சொன்னான். பக்கன்-பக்ஷன்

குறிப்பு 'கோபமும் வீரமும் குரங்குக்குத்தான் நமக்கேது?' என்று கோபாவேசத்தில ஏளனம் பண்ணுகிற காரியம் வெகு ரஸமானது.

29. அந்த சபையில் மாபெரும் பக்ஷன் மேலும் சொல்லுகிறான்

'நம்முடைய முன்னோர்களிடம் அரிய வீ ர ம் இருந்தது. அவர்களில்ச சிலர் யு த் த ம் செய்து உயிரை விட்டார்கள். அப்படி உயிரை விட்டபோது அவர்களுடனேயே,நடந்து போய் விட்டதோ அந்த வீரம்?'

'மூந்தினா முரணது,
சிலவர் மொய்அமர்

நந்தினா தமமொடு
தனி ந டந்ததோ

வந்தொரு குரஙகிடு
தீயின வனமையால்

வெநததோ, இலங்கையோ(டு)
அரககா வெமமையும. (138)

29. மூந்தினர் - நம்முடைய மூதாதைகளான வீர அரக்கர், முரண் - வீரம் சிலவர் மொய அமா நந்தினர் தம்மொடு—தொடர்நது செயத யுத்தத்தில்ச் சிலர் இறந்து விட்டனா அவருடன, தனி நடநததோ—வானுலகை நோககிக் கம்பி நீட்டி விட்டதோ அநத முரண தீயின வன்மையால — அனுமன கொளுத்திய தீ யி ன் வனமையால வெநததோ இலங்கையோடு அரக்கர் வெமமையும — அனுமனிட்ட தீ அவ வளவு பொல்லாததா, அதன வேகததால் அரககரது வீராக கினியும் வெநதுபோய விட்டதோ—இலங்கையோடு தான்!

குறிப்பு ஒரு தீ மறறொரு தீயை ஒழித்து விட்டதோ! —ஆங்கார பாவம் அழகாய் வந்திருக்கிறது செயயுளில்.

30. 'மனுஷன் குரங்கை ஏவுவதாம், அந்தக் குரங்கு வந்து நம்முடைய ஊரை எரித்து விடுவதாம், அழகு அழகு! வெகு அழகு!'

'மானிடா ஏவுவார,
குரஙகு வநதிவ்வூர

தானஎரி மடுபபது!
நிருதா தானையே

ஆனவா அதுகுறித் (து)
அழுங்கு வார!எனின,—

மேலநிகழ வதறகினி
விளமபல வேணடுமோ?' (139)

31. கோபம் மேலும் பொங்குகிறது மாபெரும் பக்ஷனுக்கு.

30 நிருதர் தானையே ஆனவர் — ராக்ஷஸ வீரர்களா லேயே ஆகிய சேனை. அது குறித்து அழுங்குவார் எனின — தீ வைதது விட்டுப போனதையே எணணி எணணிப பயநது சோர்வார்கள எனறு ஏறபட்டு விட்டால மேல நிகழவது—நாம் அதோகதி தானே.

'இந்த விதமாக ஒரே படியாய் நின்று பேசிக் கொண்டிருக்கிறேனே, இந்தப் பேச்சு இனிமேல் இல்லை. வேறு என்ன தைதை எணணை?'

' நினறுநின றிவைசில
விளமப நோகிலென

நனறினில நரரொடு
குரங்கை நாமஅறக

கொனறுகின(று) அலல(து)ஓா
எணணம கூடுமோா'

எனறனன இகலகுறித்(து)
எரியும கணணிறைன (140)

31. நனறினில-நலல முறையிலததானே இகல குறித்து எரியும் கணணினை – யுததததை எணணின மாத்திரததில்க கண அககினிபோல்ச சிவநது விட்டது அரககனுககு.

குறிபபு மனிதரையும் குரஙகையும் தினறுலொழிய அறிவு தொழிறபடாது போலிருக்கிறதே, எனறு சொல்லத் தோனறுகிறது, ஆங்காரத்தாலும் அவமானத்தாலும் மாபெரும் பக்ஷனுககு.

## வேறு என்ன செய்யவாம்!

32. மாபெரும் பக்ஷன் இவ்வளவும் பேசினன். ஆனல் ராவணனிடத்திலக் கண்ட சோர்வு மாறியதாக இல்லை.

பிசாசன் என்பவனுக்குக் கோபம் அபாரமாக வந்து விட்டது ஆனல் பேசசு சுருங்கி விட்டது.

'இனி நாம் எஙகேயாவது போயத் தொலைய வேண்டியதுதான' என்று நொந்து கொள்ளுகிருன்.

'திசாதிசை போதுமநாம்;
அரசன செயவினை

உசாவினன உட்கினன;
ஒழிதும வாழவெ'னருன்,

பிசாசனென ஒருபெயர்
பெறற பெய்கழல

நிசாசரன, உருபபுணா
நெருபபின நீர்மையான (141)

---

32 திசாதிசை போதும் நாம - நாம் இநத நாட்டை விட்டு நாலா திசையும ஓட வேணடியதுதான். அரசன செயவினை உசாவினன உடகினன - ஆளுகிற அரசனதான, என்ன செயகிறது என று கேட்க ஆரமபிதது விட்டானே!- பயந்து விட்டானே. ஒழிதும வாழவு எனருன - இனி வாழ்வாவது ஒனருவது - செதறொழிய வேணடியதுதான, எனபதாக எரிசசலோடு பேசுகிருன. பெயகழல நிசாசரன - வீரக கழலை அணிந்த அரக்கன உரு, புணா நெருப்பின நீர்மையான - மனித உருவததைக்கொணட நெருப்புககுச சமானமானவன் — நெருப்பே அரகக உருவம் எடுததது போலிருநதது, அவனைப் பார்த்தபோது நீர்மையான் தன்மையான

33. அடுத்தாற்போல் சூரியசத்ரு என்பவன் தன் எரிச்சலைக் காட்டுகிறான்.

'ராவணன் தன்மை இதுவானால், யோசனைக்கான காரியமும் இதுவானால் நம்மைப் பற்றி என்ன சொல்லிக்கொள்வதோ தெரியவில்லை!'

'ஆரியன தன்மை
ஈதாயின, ஆயவுறு

காரியம ஈதெனில,—
கண்ட ஆறறினால்ச்

சீரியா மனித்தரே!
சிறியம யாம!' எனாச

சூரியன பகைஞனஎன(று)
ஒருவன சொல்லினான (142)

33 ஆரியன - ராவணன ஆயவுறு காரியம் - யோசனை செயகிற காரியம். கணட ஆறறினால - ஏதோ கேட்டறிநத காரியம அலல, கணகூடாகப பார்த்த முறையிலேயே. சீரியர் மனித்தரே - மனுஷப் பயலகள்தான் மேலானவர்கள்! வெகு அழகு!

34\. யக்ஞ சதரு (-வேள்விப் பகைவன்) என்பவனுக்கு நடக்கிற காரியத்தை நினைக்கவே முடியவில்லை.

'ஆள்வினை நிலைமையீ(து);
அரககா ஆறறலீ(து)!

தாழுவினை இதனினமேலப
பகரத தக்கதோ!

சூழுவினை மனிசரால
தோனறிற ருமே!' என,

வேளவியின பகைஞனும
உரைத்து வெளகினன. (143)

35\. கடைசியாக தூம்ராக்ஷஸன் (-புகைநிறக் கண்ணன்) முடிவு கட்டி ஒரே வார்த்தையாகப் பேசுகிறன்.

34\. ஆள வினை நிலைமை ஈது - செய்ய வேணடிய காரியம் இதுவாம், ரொம்ப அழகு. யோசனை செய்வது தானே - செயய வேணடிய காரியம், பலே பலே! அரக்கர் திறமும் கூடிக் கூடிப் பேசுகிறதுதான. வேறு எனன செயய? தாழவு இனி இதனின மேலப பகரத்தக்கதோ - இதை விடக கேவலமான காரியம ஒனறை நம்மைக் குறிததுச் சொல்லத்தான முடியுமா. சூழுவினை மனிசராலத் தோன்றிற்றும் - பூர்வ வினை வநது நம்மைத தொலைக்க வேணடுமென்று எணணினால, கேவலம், மனிதரைக் கொணடா நம்மைத் தொலைக்க வேண்டும், அழகு அழகு!

'மனுஷர்களோடு, என்று சொல்லுவதில் பயனில்லை, சிவபிரானோடு என்றாலும் போர் செய்வது ஒன்றுதான் தக்க காரியம்.'

'தொகைநிறைக் குரங்குடை
மனிதர்ச் சொலலினஎன் !
சிகைநிறச் சூலிதன
திறத்தின செல்லினும,
தகையுடைத் தாமஅமா
சமைதல தான'என
புகைநிறக் கணணனும
புகனறு பொஙகினன (144)

36. யுததம் செயது செயது பழகிவிட்டால் ஒரு வெறி உண்டாகிவிடும் அந்தத திமிர் அவர்களை என்ன எல்லாமோ செயயச் சொல்லும், பேசச் சொல்லும், தலைவனையே நோககி முரட்டுத்தனமாகப் பேசச் சொல்லும்.

35. தொகைநிறைக் குரங்கு உடை மனிதர்-எண்ணிக்கையில் மிகுநத குரங்குச் சேனையை உடைய மனிதரை. சிகை – சுவாலை. சிகைநிறச் சூலிதன் திறத்தின் செலலினும் – அக்கினி சொரூபமான சூலாயுததனதை ஏந்திய சிவ பெருமானோடு எதிர்ததுச் செலலுதல என்றாலும். அமர் சமைதல – போர் செய்தலே. தகையுடைத்தாம் – தகக காரியம் ஆகும். புகன்று பொங்கினன் – சொலலிக கோபாவேசத்தில எழுகிறான்.

மேலே சொன்ன வெறிகொண்ட பேச்செல்லாம் சபையில் இருந்த மற்ற வீரர்களையும் கோப வெறிக்கு உள்ளாக்கி விட்டது.

மற்றவன் பின் உற்று
 மற்றை யோர்களும்,

'இற்றது வேல்நலம்,
 எண்ணல் மற(று)இல்' என(று),

உற்றன உற்றன
 சொல்லி ஓங்கினார்,

புற்றுறை அரவெனப்
 புழுங்கும் நெஞ்சினார் (145)

36. மற்றவன் பின் உற்று – புகைகிற கண்ணன் பேசி முடித்தானே இல்லையோ, உடனே தான் இற்றதுவே நலம்–ஆம்; இதுவே சரியான காரியம். எண்ணல் மற்று இல என்று – எண்ணுவதற்கு வேறு ஒரு காரியமும் இல்லை என்று புற்று உறை அரவெனப் புழுங்கும் நெஞ்சினர் – புற்றில் வாழும் சர்ப்பமே போல சீறுகிற நெஞ்சினர். உற்றன உற்றன சொல்லி ஓங்கினார் – வாய்க்கு வந்ததெல்லாம் அப்படி அப்படியே சொல்லி ஓரே கத்தாய்க் கத்தினார்கள்.

குறிப்பு அரசியலப் பொறுப்பு என்பதில் கவனத்தைச் செலுத்தாதவர்களான மேலே சொன்ன போர்த் துறையாளர் இப்படியெல்லாம் சொன்னார்கள.

பொறுப்பை உணராதவர்கள் எப்படிப் பேசுகிறார்கள் என்பதை இனிப் பார்க்கலாம்.

## வேரோடு ஒழிக்க வேண்டும்!

37 பொறுப்பற்ற சில சில்லறை அரக்கர்கள் பேச்சு அடங்கும்படியாகக் கும்பகர்ணன் பேச வருகிறான்.

ராவணனது அடுத்த தம்பி அவன். பொறுப்பில்லாமல் அவன் பேசமுடியுமா? முடியாது.

கத்திக்கொண்டிருந்த அரக்கர்களை எல்லாம் விலக்கிக்கொண்டு முன்னே வருகிறான். இன்னது செய்யவேண்டும் என்று தெரியாத பெரிய ஆசாமிகளும் இருக்கிறார்கள். அவர்களை எல்லாம் 'உட்காருங்கள்' என்று சொல்லிவிட்டு, அரசன் முன்பாக வந்து பேசுகிறான் கும்பகர்ணன்.

'என்னை உன் தம்பி என்று மதிப்பாயானால், நான் சொல்லுவது இது.'

சந்தம்

தான னன தன்ன னன
தன்ன னன தன ன

'வெம்பி கல்அ ரக்க ரை
விலக்கி, வினை தே ரா

நம்பி யாரி ருக்க' என —
நாய கனை முன் று,

---

37 வெம்பு இகல - ஒரே வெறியில போருக்காக நிற்கும். வினை தேரா நம்பியர் - விஷயம் தெரியாது, ஆனால் பெரும் பதவியில் இருப்பவர்கள். நாயகனை முன்று - இராவணன் முன்னிலையில் வந்து.

'எம்பி என இற்கில் உரை
செய்வல் இதை,' என ளு.

கும்ப கரு ணபபெ யரி
ளுனஇ வைகு றித் தான. (146)

38. 'பிரம்மனுடைய வம்சத்தில் பிறந்து, உயர்ந்த குடிப் பிறப்புக்கு உரியவன் நீ! எத்தனையோ நூலைக் கற்று அதன்படியே நடந்து வந்தவன்.'

'நீஅ யனமு தறகு லம
அதற(கு)ஒ ருவன நின ருய,

ஆயி ரமம றைபபொ ருள
உணாந(து) அறி வமைந் தாய,

37 எம்பி என இறகில - தம்பி எனறு எனனை மதிப்பா யாலல. குறிததான் – விஷயததைதத தெளிவாயச் சுட்டிச சொனளுன.

38. நீ அயன் முதற்குலம் அதற்கு ஒருவன நினருய – பிரம்ம குலம் எனற குலததின் பெருமைக்கு ஒத்தவளுய நீ ஒருவன தானே இருக்கிருய், (தினருய தனித்த பெருமை யுடன இருககிருய்) அறிவு அமைந்தாய நீவினை நயப்புறுதல

தீவி னைந யப்பு றுதல்
செய் தனை,— தெரிந் தால்,

ஏயி னஉ றத்த கைய,
இத்து ணைய வே யோ!' (147)

39. 'கீழே உள்ள நிர்வாகஸ்தர்களுக்குப் பய பக்தி இராதே, அரசாங்கம் குலைந்தல்லவா போய் விடும்' என்று உண்மையிலேயே பயப்படுகிருன் கும்பகர்ணன்

செய்தனை – ஆனல இப்போது தீய செயலகளைச செயய லாம் என்று எண்ணிவிட்டாய். தெரிநதால – நீ செய்த காரியத்தைக கொஞ்சம் நிதானித்துப பார்த்தால ஏயின – இதுகாறும் நோநதுள்ள கேடும உறத தகைய – இனி நேரக்கூடிய கேடும்- இத்துணையவேயோ – இநத அளவுட னேயா நிறகும்?

குறிபபு பெரிய சாம்ராஜயத்தை, சசசரவுகள ஏறபடாமல அமைதியாய நடதத வேணடும் எனருல நிர்வாகததில, நேர்மையும் ஒழுஙகும் இருககவேணடும. அத்தகைய நிர்வாகததை எநத விதத்திலும் அரசாங்கம் காக்க வேண டும் எனபது தறகாலததிய சாம்ராஜ்யஙகள் லக்ஷ்யமாய்க் கொணட கொளகை. கம்பர் காலததிலும் அந்தக கொள்கை இருந்தது. பொறுப்புணர்ச்சியில நின்று சாதிககும் கும்பகர்ணனுன பாததிரததைக் கொணடு அந்த அரசியல உண்மையை வெளியிடுகிருர் கம்பர்.

'யாதொரு பழுதும் இல்லாத ஒருவனது மனைவியைக் கொடுஞ் சிறையில் வைக்கிறது என்பது ஏற்பட்டுவிட்டால் நீயாவது உன் நிர்வாகமாவது! ஒன்றும் இராது!'

'ஆசில் பர தாரம் அவை
வெம்சிறை அடைப்பேம்!

மாசில் புகழ் காதல் உறு
வேம்! வளமை கூரப்

பேசுவது மானம், இடை
பேணுவது காமம்!—

கூசுவது மானுடரை,
நன்று நம கொற்றம்!' (148)

40. இத்தனை கடூரமாக அண்ணனைக் கண்டித்துப் பேசுகிறான் கும்பகர்ணன். ஆனாலும் ராஜ்யம் போய்விட நேர்ந்தால் குலத்தோடு எல்லாரும் நாசமாய்ப் போய் விடுவோமே என்ற பயமும் உள்ளத்தில் பாய்கிறது. என்ன செய்வான் கும்பகர்ணன்!

39. மாசில் புகழ் காதல் உறுவேம் - குற்றம் இல்லாத புகழ் வேண்டும் என்று வேறு ஆத்திரப் படுவோம். வளமை கூறப் பேசுவது மானம் - வள்ளல் வாசிக் கணக்கில் மானத்தைப் பற்றி ரொம்ப ரொம்ப அளப்போம். இடை பேணுவது காமம் - ஆனால், இவ்வளவு வெளி வீச்சுக்கும் இடையே அவமானப்பட வேண்டியதான காமத்தில் நாட்டம். எப்போது உள்ளத்தில் நேர்மை இல்லையோ அப்போது மனிதரை எண்ணிப் பயப்பட வேண்டியதுதான், பிறகு வீரம் ஏது நமக்கு?

'என்ன தவறு நேர்ந்தாலும் அரசனையும் நாட்டையும் காப்பாற்றி ஆக வேண்டுமே. கொஞ்சம் இளக்காரமாக இந்தச் சிறு பகையை நடத்தி விடுவோமானால், அடுத்த நிமிஷம் எப்படி யெல்லாமோ பகைவர்கள் நாலாபக்கமும் கிளம்பி விடுவார்களே' என்று பதைபதைக்கிறான்.

'எதிரி படையைத் திரட்ட ஆரம்பிக்கும் முன்ன தாகவே நாம் ஒரு நாளிலேயே கடலைக் கடந்து அங்கே போய் விடவேண்டும்' என்று ஆத்திரத்தோடு சொல்லுகிறான்.

'ஊறு படை உறுவதன்
முன்னம, ஒரு நாளே
ஏறு கடல ஏறி, நரன
வானராகள எல லாம
வேறு பெயராத வகை
வேரொடுமஅடங்க
நூறுவது வேக ருமம'
எனபது நுவனறான (149)

40 ஊறு படை - வலியுள்ள சேனை. உறுவதன முன்னம் - திரளவதற்கு முன்னதாகவே. ஏறு கடல ஏறி - கொந்தளிக்கும கடலைக் கப்பல மூலமாகக் கடந்து. வேறு பெயராத வகை - அயலிடம் பெயர்ந்து போயவிடாத படி. நூறுவதுவே கருமம் - கொன்றுதீர்ப்பதுவே நம்மு டைய கடமை. எனபது நுவன்றான - என்ற விஷயத் தைச சொல்லிவிட்டான

குறிப்பு. உயர்ந்த லக்ஷயத்தோடு கூடிய பாத்திரம் கும்பகர்ணன் என்பது பேசசிலத் தொனிக்கிறது.